ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு கூ | மெய்கண்டான் யாண்டு-எாகூ கார்த்திகை திங்கள் 1931ஆ நவம்பர் மூ—டிசம்பர் மூ | பரல் கக |

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

என்னை யேது மறிந்தில னெம்பிரான்
தன்னை நானு முன்னேது மறிந்திலன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தேனே.

பதவுரை:—

முன்=சிவபெருமான் எனக்குத் தலைவன் என்று நான் அறியுமுன்

என்னை=நான் என்னை

ஏதும் அறிந்திலன்=சிறிதும் அறியவில்லை;

எம்பிரான் தன்னை=அதனால் என்னை ஆளுந் தலைவனாகிய சிவபெருமானையும்

ஏதும் அறிந்திலன்=சிறிதும் அறியவில்லை;

என்னைத் தன்னடியான் என்றறிதலும்=ஆனால் என்னைத் தலைவனாகிய சிவபெருமானுக்கு அடிமை என்று அறிந்த உடனே

தன்னை=அச் சிவபெருமானை

நானும்=(சிறியேனாகிய) நானும்

பிரான் என்று அறிந்தெனே—என்னுடைய தலைவன் என்று அறிந்து கொண்டேன்.

விளக்க உரை:—

ஏதும் அறிந்திலேன்—ஒன்றும் அறியவில்லை.

பிரான்—ஆண்டான்; தலைவன்; எப்பொருட்குந் தலைவனாகிய சிவ பெருமான்.

" அவ னெம்பிரானென்ன நானடியானென்ன விப்பரிசே
புவ னெம்பிரான் றெரியும் பரிசாவ தியம்புகவே "

என்றும் திருவாசகம் திருச்சதகம் பாட்டில் பிரான் என்பது தலைவன் என்ற பொருளில் வருதல் காண்க.

அறிதல் என்பது ஒருவன் ஆண்டானாகிய சிவபெருமான் தன்னுடன் இரண்டறக் கலந்திருத்தலை நேரே தன்னறிவிலே அருள் ஒளி விளங்கலால் அறிதல்.

இரண்டாவது அடியில் உள்ள 'தன்னை' யென்பது அசைநிலை.

மூன்ருவது அடியிலும் நான்காவது அடியிலுமுள்ள 'தன்' சிவபெருமானைக் குறிக்கின்றது. "தமையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" என்னும் சிவஞானபோதம் அவையடக்கப் பாட்டில் 'தன்' என்பது சிவபெருமானைக் குறித்தல் காண்க.

இத் தேவாரப் பாட்டு கடவுளுக்கும் உயிருக்குமுள்ள ஆண்டான் அடிமைத் தொடர்பு கூறுகின்றது. இந்த ஆண்டான் அடிமைத் தொடர்பினால் சிவபெருமான் உயிரினுடன் இரண்டறக் கலந்து அது நலம் அடையுமாறு வேண்டுவன செய்து ஆண்டுவருகின்றான். ஆண்டான் அடிமைத் தொடர்பு என்றும் உள்ளது. ஆனால் உயிர் கட்டுக் காலத்தில் அதனை அறிதலில்லை. அப்பொழுது அத்தொடர்பு பொதுத் தொடர்பு என்று கூறப்படும். இந்தப் பொது அடிமைத் தொடர்பில் பகுத்தறிவுடைய மாந்தர் தங்களைச் சிவபெருமான் ஆண்டுவருதலை அறியாதிருத்தலுக்கு அவர்கள் தங்கள் உயிரினியல்பை அறியாது தத்துவங்களாலாகிய உடலையே தாங்கள் எனக் கொள்ளுதல் காரணமாகின்றது. பொது அடிமைத் தொடர்பிலுள்ள இந்த அறியாமை நிலை 'அறிந்திலன்' என்று முதல் இரண்டு அடிகளிலுங் கூறப்பட்டது.

பின் "தாமறிவார் அண்ணல் தாள் பணிவார்" (திருமந்திரம் 251) என்று திருமூலர் கூறியபடி மாந்தர் சிவபெருமானை வழிபட்டதன் பயனாகத் தத்துவங்களின் இயல்பை அறிந்து அவைகள் வேறு தமது

உயிர் வேறு என்று பிரித்துத் தத்துவங்களை உயிர் அறிகின்றது என்று உயிரினியல்பை அறிகின்றார்கள். அப்பொழுது அவர்கள் சிவபெருமானுடைய வேட்கை அறிவு செயல்கள் தங்களுடைய அறிவு வேட்கை செயல்களில் நிறைந்திருத்தலையும் (வியாபித் திருத்தலையும்) சிவபெருமானுடைய அறிவு வேட்கை செயல்களுக்குள் தங்களுடைய அறிவு வேட்கை செயல்கள் அடங்கியிருந்து அறிதலையும் (வியாப்பியமாயிருந்து அறிதலையும்) அறிகின்றார்கள். இந்த அறிவு ஆண்டான் அடிமைத் தொடர்பு பற்றிய சிறப்பு அறிவாகும். இந்தச் சிறப்பு அறிவையே "அறிதலும்" என்றும் "அறிந்தெனே" என்றும் சுவாமிகள் பின் இரண்டு அடிகளில் கூறுகின்றார்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

# திருவாசகமும் பரஞ்சோதி முனிவரும்

[திரு. அ. மு. சரவண முதலியார் அவர்கள்]

(சடுசு-ம் பக்கத் தொடர்ச்சி)

இன்னும் அடிகள்

"போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்
ஏகநின் கழலிணை யலாது."

என்பதனால் அத் திருவடிப் பேற்றையன்றித் தமக்கு வேறு பற்றில்லை என்பதையும்,

"இரவும் பகலு மெழிலார் பாதப்
போதாய்ந் தணைவ தென்றுகொலோ"
"பாடிப் பாடிப் பணிந்து பாதப்
பூப்போ தணைவ தென்றுகொலோ"

என்பவற்றால் அப் பேறு தமக்கு எஞ்ஞான்று கிட்டுமோ வென வருந்தியதையும்,

"உன்திரு மலர்ப்பாதம் அடைந்து நின்றிடுவா
ளுசைப் பட்டேன் கண்டா யம்மானே"

என்பதனால் அதிற் றமக்குள்ள ஆசையையும்,

"தருக நின்பாதம் போற்றி"

"ஆர்ந்த நின்பாதம் நாயேற் கருளிடவேண்டும்"

என்பவற்றால் அப் பேற்றுக்கு ஆண்டவனைத் தாம் மன்றாடிக் குறையிரந்து வேண்டினமையையும்,

"நின்றிருவடிக்காம் பவமேயருளு கண்டாய்"

என்பதனால் 'இப் பிறவி அதனைப் பெறுதற்குத் தகுதியுடைய தன்றேல், அடுத்த பிறவியையாயினும் அதற்கு வாய்ப்புடைத் தாக அருளவேண்டும்' என விரும்பிக் கேட்டுக்கொண்டமை யையும் விளக்கியருளுகின்றார்.

இன்னும், அத் திருவடிக்குள்ள பேரருளை விளக்குமுகத் தால்,

" வண்ணந்தானது காட்டி வடிவு காட்டி
மலர்க்கழல் களவைகாட்டி வழியற்றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்"

என, வண்ணம், வடிவு என்னு மிரண்டையும் காட்டினாலும், மலர்க் கழல்களைக் காண்பித்த பின்னர்த்தான் தமது பிறப்புத் தொலைந்தது என்பதைக் குறிப்பித் தருளினர். இங்கு "வண் ணந்தானது காட்டி..................கொண்டாய்" என்பதனால் பேரொளி மயமான பெம்மான் வெளிப்பட்டுத் தன்னருட்டிரு வுருவத்தைக் காட்டிய உண்மையை அடிகள் குறிப்பிடுவது கரு தத் தக்கதாகும். அஃது எங்ஙனமெனிற் கூறுதும்:—

மக்களின் காட்சிக்கும் கடவுளின் காட்சிக்கும் ஒரு பெரிய வேற்றுமை யுண்டு. மக்கள் சேய்மையிற் காணப்பட் டால் முதலில் அவர்தம் உருவமும், சிறிது நெருங்கியபின் உறுப்புக்களும், அண்மையில் வந்தபின் நிறமும் தோன்றுநிற் கும்; இனி, கடவுளின் காட்சியிலோ முன்னர் ஒளியும், பின் வடிவமும், அதன்பின் உறுப்புங் காணப்படும். அடிகள் உண்மையாகவே இறைவனைக் கண்டு களித்தவ ராகலின், அவ் வுண்மையை 'வண்ணந்தானது காட்டி' என முதலில் ஒளியைக் கூறி, 'வடிவு காட்டி' எனத் திருவுருவத்தைச் செப்பி, 'மலர்க் கழல்களவை காட்டி' என இறுதியில் இறைவனது அருளு

றுப்பும் தமக்கு இன்ப மளித்ததுமாகிய பொன்னடியைப் புகன்றதால் விளக்கியருளினர்.

இவ்வாறு ஆண்டவனருள் வடிவத்தையும், திருவடியையும் தாம் கண்ணாரக் கண்டு களிப்பெனுங் கடலுள் ஆழ்ந்தது பற்றி அடிகள் திருவாசகத்திற் கூறியருளிய பகுதிகள் அளவிறந்தன; அவற்றுட் சில

திருவுருவக் காட்சி

"கண்ணுலியானுங் கண்டேன் காண்க"

"உண்டொ ரொண்பொருளென் றுணர்வார்க் கெலாம்
பெண்டிராணலி யென்றறி யொண்கிலை
தொண்டனேற் குள்ளவாவந்து தோன்றினுய்"

"அடியோங் கண்ணுர வந்து நின்ருன்"

"திகழாநின்ற திருமேனி காட்டி யென்னைப் பணிகொண்டாய்"

திருவடிக் காட்சி

(1) "மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"

(2) "நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி"

(3) "கண்ணார் கழல் காட்டி நாயேனை யாட்கொண்ட"

(4) "நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங் காட்டி"

(5) "திருமாலும் பன்றியாச் சென்றுணராத் திருவடியை
உருநா மறியவோ ரந்தணனு யாண்டு கொண்டான்."

(6) "பாரிடைப் பாதங்கள் காட்டி"

(7) "கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர"

(8) "காட்டினையுன் கழலிணைகள்"

(9) "கண்ணார வுய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே"

(10) "பாதமலர் காட்டியவா றன்றே"

(11) "ஒண்மலர்த்தாடந்து"

(12) "தன் பொன்னடியிணை காட்டி"

(13) பொற்கழலிணை காட்டி"

(14) "மென்மலர்க் கழல் காட்டி"

(15) "மலரடியிணை காட்டி"

(16) "விரைமலர்க் கழல் காட்டி"

(17) "தன்னிணை மலர்க்கழல் காட்டி"

(18) "நீ கண்டு கொள்ளென்று காட்டிய சேயமா மலர்ச் சேவடி"

(19) "கருணை காட்டித் தன் கழல் காட்டி"

(20) "நின்னரு ளளித்துன் னிணை மலரடி காட்டி"

(21) "நின் றூமலர்க் கழல் தந்து"

(22) "பெரியோ னொருவன் கண்டுகொள் ளென்றுன் பெய்கழ லடி காட்டி"

என்பன.

இவற்றுள், முன் பின்னுள்ள அடித் தொடர்ச்சியால் ஒன்று முதலிய எண்ணுள்ள சில தொடர்களும், "என் பிறவி கெட்டின் றழிகின்ற தாக்கிய தாள்" என்னுந் திருக்கோவையார்த் தொடரும் "திருவடி கண்ட பின்னரே பிறவி அற்றது' என மேலே காட்டியதனை விளக்குதல் காண்க.

இன்னும் அடிகள் தகுதியற்ற தம்மை ஆட்கொண்டதனுற் றுன் ஆண்டவன் திருவடி, தன்னருட் டிறமையைக் காட்டிய தென்னும் பொருள்பட, "எனையுய்யக் கொண்ட பிரான்றன் னுண்மைப் பெருக்கமாந் திறமை காட்டிய சேவடி" எனக்கூறியும், "அங்கண னந்தண னயறை கூவி வீடருளும், அங் கருணை வார்கழல்" என அருளியும் அத்திருவடியின் பேரருளை விளக்கியருளினர்.

அத் திருவடியின் பேரருளுடைமையை வியந்து கூறுமிடத்து, "பெற்ற தாயின் தன்மை போல்வது நின்தன்மை என்பேன்; அதற்கு ஏற்பவே மகவு அழுங்காலை இன்றியமையாப் பணியின்கண் ஈடுபட்டிருக்குந் தாயானவள் வருதற்குச் சிறிது காலந்தாழ்ப்பது போல, நீயும் யான் அழுதால் வருதற்குச் சிறிது காலந் தாழ்த்துவாய்; எனினும் நின் திருவடிகள் அவ் வழுதலைப் பொருவாய் வந்து எற்கு இன்னருள் பாலிக்கும்" என்ற பொருளையமைத்து,

"பெற்றிடுதாய் போல்வதுநின் பெற்றியென்பேன் பிள்ளையது
மற்றழுதாற் கேட்டும் வராதங்கே—சற்றிருக்கப்

பெற்றாள் பொறுப்பள் பிரானீ பொறுக்கினுநின்
பொற்றாள் பொறுவென் புலம்பு."

என இராமலிங்க அடிகள் இயம்பியது இங்கு எண்ணி இன்புறத் தக்கதாகும்.

'அழுதலை ஆண்டவன் திருவடிகள் பொறு' என்பது இங்குக் கருதத்தக்கதாகும். இவ்வாறு அத் திருவடிகள் பேருளைக் கொண்டிருந்தமையாற்றான், அடிகள் ஆண்டவன் பிரிவுக்கும் அத்துணை வருந்தாது, அவன் திருவடிப் பிரிவுக்கே பெரிதும் வருந்தி,

"விரைமலர்த் திருப்பாத
முற்றிலா விளந்தளிர் பிரிந்திருந்து நீ யுண்டனவெல்லா மூன்
அற்றவாறு நின்னறிவு நின்பெருமையும் அளவறுக்கில்லேனே"

எனவும்,

"முனைவன்பாத நன்மலர் பிரிந்திருந்து நான்
முட்டிலேன் றலைகீறேன்
இனையன் பாவனை யிரும்பு கன் மனஞ்செவி
யின்னதென் றறியேனே"

எனவும்,

"எல்லையில் கழல் கண்டும் பிரிந்தனன்
கல்வகை மனத்தேன்"

எனவுங் கூறியருளுகின்றார்.

இன்னும் அடிகள், முன்னர்த் திருவடி காட்டிய உண்மையை,

"நின் விரை மலர்த்தாள், பண்டு தந்தாற்போற் பணித்து"
"கழுமணியே யின்னுங் காட்டுகண்டாய் நின்புலன் கழலே"

என்று கூறுமாற்றால் நன்கு விளக்கியருளுகின்றார். என்னை? 'பண்டுதந்தாற்போல்' என்றும், 'இன்னுங் காட்டு' என்றும் வருவனவற்றா லென்பது.

"அவன் பூங்கழல்யாம், பேசத்திருவார்த்தையிற்
பெருநீளம் பெருங்கண்களே"

எனக் கோவை கூறும் நமது அடிகளின் திருவாய்,

"பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே"

என வாசகம் அருளியது மாண்புடைத்தாகும்.

இனி, திருவாசக இறுதியிலுள்ள 'அச்சோப்பத்தில்,

"மையலிடங் கொண்ட பிரான்றன் கழலே சேரும் வண்ணம்"

எனவும்,

"மாதொருகூ றுடைய பிரான்றன் கழலே சேரும் வண்ணம்"

எனவும் அடிகள் அருளுமாற்றால் அடியடைந்தது நன்கு புலனாதல் காண்க. 'திருவெம்பாவை' முழுவதிலும் திருவடி பேசப்பட்டிருத்தலும், அதன் இறுதிப் பாட்டில் 'ஐந்தொழிலையும் அவன் திருவடியே நடத்துகின்றது' எனக் கூறப்பட்டிருத்தலுங் காண்க. திருவாசகத் தொடக்கத்தில் சிவபெருமான் திருவடிக்கு வாழ்த்துக் கூறுவதும் எண்ணி இன்புறற்பாலது.

மேற்காட்டிய அகச்சான்றுகளால் நமது 'அழுதடி யடைந்த அன்பர்' ஆண்டவன் அடிப்பேறு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து, இறுதியில் அதனையே அடைந்தமை வெள்ளிடை மலையென விளங்குதல் காண்க.

## 3. அன்பர்

பெரியார் ஒவ்வொருவருக்கும் ஏற்றம் வருவது ஒவ்வொரு காரணம் பற்றியேயாம். அடிகளின் பெருமை அனைத்திற்குங் காரணம் அவர் ஆண்டவன் அடியிணை மலர்க்கண் வைத்த மெய்யன்பு ஒன்றேதான். இவ்வுண்மையை, துறவுநிலையாற் பெருமை யடைந்தவ ரெனக் கருதி, "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல், ஆருந்துறக்கை யரிதரிது" எனத் தாயுமான அடிகளாற் போற்றப்பட்ட பட்டினத்தடிகள் "திருவிடை மருதூர் மும்மணிக் கோவை'யில்

"வித்தகப்பாடன் முத்திறத்தடியரும்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்"

எனக் கூறுமாற்றால் விளக்கியருளினர்.

இனி, உமாபதிசிவனர் பாடியதாக வழங்கும் "வள்ளுவர் சீரன்பர் மொழி வாசகம்' என்னும் வெண்பாவில் அடிகள்

வேறு பெயராற் குறிக்கப்படாது, 'அன்பர்' என்றே குறிக்கப் பட் டிருத்தல் காண்க.

இன்னுங் கற்பனை ஊற்ருகிய சிவப்பிரகாச அடிகள், "வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப!" என்றும்,

"செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப!"

என்றுங் கூறி யருளினமையுங் காண்க.

இன்னும், அவர் ஓர் அன்பர் என்பதற்கு அவ ரியற்றியரு ளிய 'திருவாசகம்' ஒன்று போதாதோ? பிற சான்றும் வேண்டு மோ? 'திருவாசகத்தி லுருகார் ஒரு வாசகத்திலு முருகார்' என்பது நமது நாட்டுப் பெரியார்களால் பல்லாண்டுகளாக வழங்கப்படும் பழமொழி யன்ருே? அவர் அன்பராக இல்லா விடின் அவர் வாசகம், தன்னைப் படிப்போரையும் கேட்போரை யும் எங்ஙனம் அன்பராக்கும் வன்மை யுடையாதாகும்? ஒரு வன் தன் பழக்கத்தி லில்லாத தொன்றைக் கூறிஞனுயின், அக் கூற்றுக்கு மக்களைத் தன் வழிப்படுத்தும் ஆற்ற லிரா தென்பது அறிஞர் கண்கூடாகக் காணும் உண்மை யன்ருே? இற்றை நாட் பெரியா ரொருவர், "என் அநுபவத்திற்குக் கொண்டு வந்து நன்மை தீமை பாராத எதனையும் யான் மக்க ளுக்குச் சொல்லுவ தில்லை" எனக் கூறும் பொன்மொழி போற் றத்தக்க தன்ருே! "கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம் வெற்றுரை" என்பது குமரகுருபர அடிகள் கோதில் மொழியன்ருே? அன்பின் ஊற்றுக்கு நிலைக்களனுகிய திருவாசகத்தின் பெருமையை அவ்வன்பு அணுத்துணையு மில் லாப் பேதையாகிய யாஞே அறிந்து எழுதவல்லுநன்? "பாம் பறியும் பாம்பின கால்" என்பது போலப் புலவனைப் புலவன் அறிவான்; அன்பனை அன்பன் அறிவான்; யோகியை யோகி அறிவான்; ஞானியை ஞானி அறிவான்; ஏனையோர் 'அறிந் தோம்' என்பது பேதமை யன்ருே! அங்ஙனம் அறியினும் அஃது ஒரு சிறிய கூறன்ருே? திருவாசகப் பெருமையை அறிந் தோர் யார்? கவிச்சிங்கமாகிய 'சிவப்பிரகாச அடிகள்' அறிந்

தார்; அன்பு வடிவாகிய 'இராமலிங்க அடிகள்' அறிந்தார்; மேனாட்டறிஞராகிய 'ஜீ. யூ. போப்' என்பார் அறிந்தார்; பிற அறிஞர் பலர் அறிந்தனர், அறிகின்றனர், அறிவர்.

இவர்கள் அறிந்து எவ்வெவ்வாறு அடிகளையும் திருவாசகத்தையும் பாராட்டினார் என விரிக்கிற் பெருகுமாதலின் அஞ்சி விடுக்கின்றேன்.

மேற்காட்டிய வாற்றால் நமது அடிகள் ஒரு 'அன்பர்' என்பது நன்கு புலனாகும்; ஆனால், 'அழுதல் ஒரு சாதனமா? அடியடைந்தாரா?' என்னும் இரண்டு பகுதிகளும் திருவாசகத்தினுள்ள ஆதரவுகளைக் கொண்டே 'ஆம்' என்று நிறுவப்பட்டன. என்னை? "திருவாசகப் பயிற்சி மிகுதியால் பரஞ்சோதி முனிவரென்பார் திருவிளையாடலில் அடிகளை 'அழுதடியடைந்த அன்பர்' எனக்கூறினார்" என முன் குறித்தலாலென்க.

இனி, "அவையிற்றைப் போன்றே இந்த 'அன்பர்' என்ற பகுதியை நிறுவுதற்கும் மேற்காட்டிய புறச்சான்றுகள் போதா; அகச் சான்றுகள் வேண்டும்" எனின், நன்று கூறினாய்! எங்ஙனம் அகச் சான்றுகள் கிடைக்கும்? ஒருவர் தம்மை ஓர் அன்பரென்றாதல், பெரியாரென்றாதல் கூறுவாரா? அன்றிக் கருதுதல் தானுஞ் செய்வாரா? அங்ஙனம் கருதின் அவர் உண்மையான பெரியாருமாகார் அன்பருமாகார்; ஒரோவழி அவர்களிடம் அப்பெருமையும் அன்பு மிருப்பினும் அவை பறந்தோடிப் போதல் முக்காலும் உறுதி என்க. பெரியோரின் இலக்கணங்கள் பலவற்றுள்ளும் தலைசிறந்தது, தான் 'எவ்வித நலனுமுடைய வனல்லன்; எல்லா உயிரினும் கடைப்பட்டவன்' என்று கருதுவதன்றோ? இக் கருத்து இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னுங் கால மூன்றிலும் முறையே இருந்த, இருக்கின்ற, இருக்கும் பெரியா ரனைவருக்கும் ஒத்ததாகும். இஃது அவர்தம் உண்மை வரலாற்றினையும் பாட்டுக்களையும் கூர்ந்து ஆராய்வார்க்குப் புலனாவ தொன்று. அவ ரியற்றிய நூல்களை ஆராய்ந்து பார்க்கின், அவற்றின்கண் பெரும்பாலும் அவர்களின் வாழ்க்கைத் தோல்வியேதான் காணப்படும். வெற்றி குறித்த

செய்தி அரிதினும் அரிதாகும். அவ்வாறு அரிதிற் காணப் படும் வெற்றிதானும் அவர்களை யறியாது போந்ததொரு உண் மையாகும். தோல்விச் செய்தி நிறைந்து காணப்படுதற்குக் காரணம் இரண்டு: ஒன்று தமது தோல்வி அணுவாயினும் அதனை மேருமலையினும் மாணப் பெரிதாகக் கருதி, புடைபடக் கவன்று மூலநோய் தீர்க்கு முதல்வன் திருமுன்னின்று முறை யிடுதல்; இதன் பயன் ஆண்டவன் அதனை மன்னித்தலும், மறித் தும் அப்பிழை தம்மிடம் நேராமையுமாம்; மற்றொன்று, மற்ற மக்களிடத்துக் காணப்படும் தீச்செயல்களைக் கண்டு கவன்று அவற்றைத் தம்பாலேற்றிக் கூறி முறையிடலாகும். எனவே, எவ்வகையானும் தங்கள் சிறுமையையும் தோல்வியையுமே கூறு வார்களன்றி, பெருமையையும் வெற்றியையுங் கூறுர்கள். பின் னுள்ளவை அவர்கட்குத் தெரிவதுமில்லை; ஒரோவழித் தெரி யினும், தாம் கோலி வரையறுத்த எல்லைக்கு அவை அணுவினும் அணுவாகத் தோன்றும். ஆனால், பிறருக்கு அவை பெரியவற் றினும் பெரியவையே. ஆதலினாற்றான் அப்பிறர் தம்மைப் புக ழும்போது,

"இல்லபுகழ்தலின் வைதலே நன்று"

என்னும் கருத்துடையவராய் அப்புகழ்ச்சியை நஞ்சினுங் கொடி தாக அப்பெரியார் நினைப்பதூஉமென்க. என்னை? அப்பெருமை யும் வெற்றியுந் தம்மிடத்து இல்லை யென்பதூஉம், அப்புகழ்ச்சி தமது தாழ்வெனுந் தன்மையைத் தொலைத்துப் பண்டமாற்றா கச் செருக்கைப் புகுத்தி விடுமென்பதூஉம் அவர் கருத்தாகலா னென்பது.

இனி, அணுவினுஞ் சிறிதாகிய தீமையை மலையினும் பெரி தாகத் தாம் கருதலினால் பிறர் இகழ்ச்சியைப் பெரிதும் அவர் அவாவுகின்றனர்; என்னை? தமக்குச் செருக்கு அரும்பா திருத் தற்கும், தமது தீமையைப் போக்குதற்கும் அஃது துணையாக நிற்குமென்பதும் அவர் கருத்தாகலின்.

இக்கருத்து முழுதுக்கும் திருவாசகத்தில் நிரம்பிய ஆதரவு களுண்டு, அவை விரிவஞ்சி விடப்பட்டன.

இனி, இங்ஙிலேயி னின்றெழுகிய நமது திருவாதவூரடிக ளருளிய திருவாசகத்தின்கண் அவர் அன்பரென்பதற்கு அகச் சான்றுகள் அகப்படாவென்பது ஒருதலே. அம்மட்டுமன்றி மேற்காட்டிய காரணங்களால் அதற்கு மறுதலேயாய சான்றுகள் நிறையக் கிடக்கும். அவை,

"ஆடுகின்றிலே கூத்துடையான் கழற்கன்பிலே"
"அவ்வா றிற்கு மன்பிலேன்"
"நெகுமன்பில்லே நினேக்காண"
"இல்லேநின் கழற்கன்ப தென்கணே"
"நான்றனக் கன்பின்மை நானுந்தானு மறிவோம்"
"கண்ணப்பனெப்பதோ ரன்பின்மை கண்டபின்"

என்பன.

இங்ஙனம் தம்மிடம் 'அன்பில்லே, அன்பில்லே' எனப் பல படக் கூறி, ஆண்டவனே நோக்கி அந்த அன்பைத் தமக்கு அருளுமாறு திருவாசகத்தில் அடிகள் கூறுமிடங்கள் பல; அவற் றுட் சில,

"நின்றன்வார் கழற்கன்பெனக்கு நிரந்தரமா யருளாய்"
"இடையறு அன்பெனக்கென்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்"
"அன்புநின் கழற்கணே, புணர்ப்பதாக"
"மெய்கலந்த அன்பரன் பெனக்குமாக வேண்டுமே"
"வேண்டுநின் கழற்கணன்பு"
"மெய்யன்பை உடையாய் பெறநான் வேண்டுமே"
"தொண்டனேற்கு முண்டாங்கொல்மிக்க அன்பே மேவுதல்"
"பெறவே வேண்டு மெய்யன்பு"
"அடியா ருனக்குள்ள அன்புந் தாராய்"

என்பன. பேரன்பராகிய நமது பெரியார் இங்ஙனம் தம்மிடம் 'அன்பில்லே' எனக் கருதிக் கவன்று, அதனேப் பெறுதற்குக் கூத்தப் பெருமான் திருமுன் குறையிரந்ததற்குக் காரணம்

என்னே? ஒருவாறு கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச அடிகள்,

"அருங்கவிவாத வூரனேமுதலோ ரன்பிலேமென்றது வேண்டி
இரங்குதல் பொய்ம்மை அன்பிலேனென யானிரங்கலே மெய்யெனக்
[கருளாய்"

எனச் சோணசைலமாலையிற் கூறியவாறு நமது அடிகள் ஆண்டவன் திருமுன்னர்ப் பொய்தான் கூறினரோவெனின், அறுநூற்றைம்பத்தெட்டுப் பாடல்களடங்கிய திருவாசகமென்னும் ஒரு சிறிய நூலின்கண், சிறிதேறக்குறைய முப்பத்திரண்டு இடங்களிற் பொய்யைக் கடிந்து கடிந்துரைத்தருளிய நம் 'பொய்யடிமை யில்லாத புலவர்' பெருமான் 'பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே' எனத் தம்மாலழைக்கப்பட்ட சிவபெருமான் திருமுன் நின்று பொய் கூறினரெனப் புகலக் கருதுவது பொருந்துவதொன்றாகுமோ? ஆகாது; ஆகாது.

எனின், 'சிவப்பிரகாசர் கருத்து யாதாயிருக்கலாம்' என ஓர் ஐயம் நிகழுமன்றே! அதனை அகற்றுதற்கு அவரியற்றிய 'நால்வர் நான்மணிமாலை' என்னும் நூலின்கண் அடிகளை நோக்கி,

"அழுது செம்பொனம்பலக் கூத்தன்,
அருளால் பெற்ற அன்பினிலொரு சிறிது,
அடியனேற்கு மருளல்வேண்டும்; நீயே கோடல்
நின்னருட் பெருக்கிற்கு ஏற்றதன்று"

எனவும்,

"பகிர்மதிதவழும் பவளவார் சடையோன்,
பேரருள் பெற்றும் பெறாரினழுங்கி,
நெஞ்ச நெக்குருகி நிற்பை நீயே,
பேயேன் பெறாது பெற்றார் போலக்,
களிகூர்ந்துள்ளக் கவலை தீர்ந்தேனே"

எனவும் அவர் கூறுவனவே போதிய கருவிகளென்க.

(தொடரும்)

# தமிழை வளர்ப்ப தெப்படி?

[திரு. D. N. ஆறுமுகம் பிள்ளை யவர்கள்]

(௪௩௩-ம் பக்கத் தொடர்ச்சி)

அச்சில் வராத அரிய நூல்களையும், கல்லெழுத்துக்களை யும், செப்பேட்டு எழுத்துக்களையும் ஆராய்ந்து அச்சிட்டு வெளியாக்கல் வேண்டும். இவை வரலாற்றாராய்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிவனவாம்.

இசை வடமொழிக்கே யுரியது; தெலுங்கே இசைக்கு ஏற்றமொழி; தமிழ் அன்னதன்று; பண்களின் பெயரெல்லாம் வடமொழிப் பெயரே என்று பலர் கருதுகின்றனர். பெருங் கூட்டங்களில் பாடும் இசைப்புலவர்களுங் கூடத் தெலுங்குப் பாடல்களையும் வடமொழிப் பாடல்களையுமே பாடுகின்றனர்; தமிழில் பொருட் செறிவில்லாச் சில பாடல்களை மட்டும் வேண்டா வெறுப்புடன் பாடுகின்றனர். இனியேனும் தமிழ் மக்களாகிய இசைப் புலவர்கள் தமிழிசைப் பாடல்களைப் பாடு மாறு செய்வதுடன் தமிழில் இசையுண்டு, இசைநூலுண்டு, பண்களுக்குப் பெயருண்டு, இசைக்கருவியுண்டு என்று அறிவுறுத்தல் வேண்டும்; பல இசைநூல்களையும் வெளியிடல் வேண்டும். பழந்தமிழ் நூல்களைக் கற்றோரெவரேனும் தமிழில் இசை இல்லை யென்று கூறத் துணிவரா?

இஞ்ஞான்று இயற்கைக்கும் நன்னடக்கைக்கு மாறுபட்டனவாய் நடைபெறும் கூத்துக்கள் நடைபெறாவண்ணம் அரசினர் உதவி பெற்றுத் தடுத்தல் வேண்டும்; தமிழறிவும், ஆடல் பாடல்களில் தேர்ச்சியும், நல்லியல்பும் வாய்ந்தோரே கூத்தாடல் வேண்டும். இது செய்தால் பல சிறுவர் சிறுமிகள் தீயநெறி யினின்றும் தப்புவர் என்பது திண்ணம்.

இக்கழகத்தில் சில தமிழ்த் தேர்வுகளை ஏற்படுத்தி அத் தேர்வுகளில் தேர்ந்தார்க்குப் பட்டம் வழங்கல் வேண்டும். ஆங்கிலக் கல்லூரிகளில் உயர்தரத் தேர்வுகளில் தேர்ந்தார்க்குப்

பல்கலைக் கழகத்தார் உடையளித்தல்போல் இவர்கட்கும் அடையாள உடை யளித்தல் வேண்டும். இப் பட்டங்களையும் உடையளித்தலையும் அரசினரும் ஒப்புக்கொண்டு மதிப்புத் தருமாறு முயன்று முடித்தல் வேண்டும். இது கைகூடின் பல செல்வர்களும் கூடப் புகழ்கருதித் தமிழ் கற்கத் தொடங்குவர். இத்தேர்வுகளில் தேரியவர்களுக்கே பள்ளிக்கூடங்களில் தமிழ்க் கணக்காயர் தொழில் கொடுக்குமாறு அரசினரை இசைவித்தல் வேண்டும்.

இந்நாளில் பிழைகள் பல மலிந்தனவாய்க் கற்பாருள்ளத்தைத் தீய நெறியிற் கொண்டு செலுத்துவனவய்ப் பல செய்யுள் நடை நூல்களும் உரைநடை நூல்களும் அடிக்கடி தோன்றுகின்றன. இவை தோன்ருவண்ணம் ஊக்கங் காட்டித் தடுத்தல் பெருநலந் தரும்.

தமிழின் பெருமை யாண்டும் பரவுதற்கும் தமிழை நன்கு வளர்ப்பதற்கும் இன்றியமையாதன இன்னும் சிலவுள. நம் நூல்களின்கண் எவ்வளவு அரிய நுண்பொருள்கள் நிரம்பியிருப்பினும் நம்மவர் அவற்றை முதலில் உணர்வதில்லை; ஆங்கிலர் முதலிய பிற நாட்டார் உணர்ந்து வெளியிட்ட பின் "ஆ! எங்கள் தமிழ் நூலில் எவ்வளவு நுண்பொருள்கள் உள" என்று பெருமை பேசிக்கொள்ள மட்டும் முன் வருகின்றனர். எவ்வாருயினும் நம்மொழியின் சிறப்பு நூல்களிலுள்ள நுண் பொருள் முதலிய எல்லாம் எங்கும் பரவித் தமிழ் உயர்நிலை யடைதல் வேண்டும்; இதுவே நம் நோக்கமாகையால், தமிழ் மொழியையும் தமிழிலுள்ள அரிய பெரிய நூல்களையும் ஆங்கில நன்மக்கள் கற்றுத் தமிழின் சிறந்த இயல்பையும், தமிழ் நூல்களின் நுண் பொருள்களையும் பற்றி அரிய பெரிய விரிவுரை நூல்கள் வெளியிடுமாறு செய்தல் நம் கடமை. பேச்சு வழக்கில் இல்லாத ஆரியமொழி நூல்களைப் பற்றி மாக்ஸ்முல்லர் முதலிய ஆங்கிலர்கள் பெரிய பெரிய விரிவுரைகள் எழுதி யிருக்கின்றனரே, அது எதனுல்? ஆரிய மொழியிற் பற்றுடைய பலர் பெருமுயற்சியா னன்ருே? இவர்தம் செயல் கண்டும் நாம்

வீணே பொழுது போக்கலாமா? ஆங்கிலத்துள்ள அரிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தல் போலவே முன்னுள்ள அரிய பெரிய தமிழ் நூல்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து ஆங்கில நன்மக்களும் கற்குமாறு செய்தல் வேண்டும். இரவீந்திரநாத தாகூர் அவர்கள் தம் தாய் மொழியி லாக்கிய நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க, ஆங்கில மக்களும் கற்கின்றார்கள் என்றோ? "மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்" என்னும் நூல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படல் வேண்டும்; ஆங்கில மக்களும் அதனைக் கற்றல் வேண்டும் என நான் பலகால் நினைந்ததுண்டு. தமிழ், ஆங்கிலம், ஆரியம் ஆகிய மொழிகளினும் சிவஞானபோதம் சிவஞான சித்தியார் முதலிய தமிழர் கடவுட் கொள்கை நூல்களினும் வல்ல ஒரு சிலரேனும் மேனாடுகளிற் சென்று பொதுவாகத் தமிழ்மொழி தமிழ் நூல்கள் இவற்றின் பெருமையையும் சிறப்பாகத் தமிழர் கட்வுட் கொள்கைகளையும் (சைவ சித்தாந்தம்) விரிவுரைகளின் வாயிலாகப் பரப்புதல் வேண்டும். சுமார்த்தர்கள் தங்கள் கடவுட் கொள்கைகளை எவ்வளவுவரை மேனாடுகளிற் பரப்பி யிருக்கின்றனர் என்பதை நினைந்து பார்மின்.

சென்னைப் பல்கலைக் கழகத்தாரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரும் எல்லா வகுப்புகளினும் தமிழை இன்றியமையாத பாடமாக வைக்கவும் எத்துறை நூலையும் தமிழிலேயே கற்பிக்கவும் வற்புறுத்துவதுடன் இயலுமேல் (இனி நிலைநாட்டப் பெறும்) தமிழ்ப் பெருங்கழகச் சார்பாகவும் ஒரு கல்லூரி வைத்து நடாத்தல் வேண்டும். இக் கல்லூரியில் தமிழிலேயே எல்லாக் கலைகளையும் கற்பிப்பதுடன் தமிழிலக்கண இலக்கியங்களை நன்முறையிற் பயிற்றுவித்தல் வேண்டும். ஆங்கிலம் ஆரியம் ஆகிய மொழிகளையுங் கற்பித்தல் வேண்டும். அரசினரால் நடத்தப்பெறும் (B.A., M.A.) உயர்தரப்பட்டத் தேர்வுகட்கு இக்கல்லூரி மாணவர்களும் சென்று பட்டம் பெறுமாறு செய்தல் வேண்டும். இங்ஙனம் கல்லூரி நடாத்துதற்கு ஆங்கிலத்தொடு பலதுறைக் கலைகளில் வல்லுநரும், தமிழ்ப்புலவர்களும், ஆரியம் உணர்ந்தவர்களும் ஆகிய தமிழன்பர்கள் எளிய

ஊதியம் பெற்றுக் கணக்காயர்களாக அமர்தல் வேண்டும். ஒரு கலாசாலையில் திலகர் எளிய ஊதியம் பெற்றிருக்க வில்லையா?

எவ்வளவுதான் பேசியும் என்? இஞ்ஞான்றைத் தமிழ்ப் புலவர் வறுமையை நீக்க வழியென்ன? "அடகெடுவாய் பல தொழிலு மிருக்கக் கல்வி அதிகமென்றே கற்றுவிட்டோம் அறிவில்லாமல்" என்ற பாடலைப் பாடுவர் பலர். பண்டைநாளிற் போல் புலவர் அருமையறிந்து கொடுக்கும் வள்ளல்கள் உளரா? "தலைவாசலின் கதவை யாரடி திறந்தவர்கள் தமிழ் வாணர் வரில் விடுவரோ?" என்ற ஒரு புலவர் சொல்லை நோக்கிற் பல்லாண்டு கட்கு முன்னரே புலவர்க்களிப்பா ரற்றனர் என்பது விளங்கும். இந்நாள் நிலையறிந்து அறிவுக்காகக் கல்வியும் பொருளுக்காக வேறு தொழிலும் புலவர்கள் கற்றனரா? இல்லையே. எல்லார்க்கும் தமிழ்க் கணக்காயர் தொழில் கிட்டுமா? இனி இவர்கட்கேதேனும் பிழைக்கும் வழியுண்டா வென்பதைப் பற்றிச் சிறிது நினைந்து பார்ப்போம்.

அரசினர் ஒப்புவரேல் வழியுண்டு. வழக்கு நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழிலேயே ஓர் தேர்வு நடாத்தல் வேண்டும். இதற்குச் சிறிது ஆங்கிலத்துடன் சிறந்த தமிழறிவு வாய்ந்த புலவர்களையே எடுத்தல் வேண்டும். இத்தேர்வில் தேரியவர்கள் வழக்கறிஞர்களாக இருக்க அரசினர்பால் மன்றுடி ஒப்பச் செய்தல் வேண்டும். நம் நாட்டிற் பெரும்பாலான வழக்காளிகளும் தமிழரே; வழக்கு மன்றத்தே நடைபெறும் கடாவிடைகளும் தமிழே; பெரும்பாலான வழக்கு மன்றத் தலைவர்களும் தமிழுணர்ந்தவர்களே யாகலான், இத் தொழிலுக்குத் தமிழறிவுமட்டும் போதுமானதே. தமிழறியாத ஆங்கிலர் முதலியோர் தலைவராக வுள்ள மன்றங்களில் மொழிபெயர்ப்பாளர் மொழிபெயர்த்துக் கூறலாம். ஆங்கில மருத்து நூற்களை மொழிபெயர்த்துத் தேர்வு நடாத்தித் தமிழ்ப் புலவர்களை மருத்துவர்களாக வரச் செய்யலாம்; இது தமிழர்கட்குப் பேருதவியாகும்; பொருட் செலவு குறையும். அறநிலையப் பாதுகாப்பு மன்றத்தார் தங்கட்குக் கீழுள்ள எல்லா வேலைகளையும் தமிழ்ப்

புலவர்கட்கே தந்தால் அவர்களும் பிழைப்பர், அறநிலையங்களில் நடைபெற வேண்டுவனவும் முறை தவறாமல் இனிது நடைபெறும். உழவுக் கல்லூரியில் பல்கலைக் கழகப் பட்டம் பெற்றவர்களையும் பட்டம் பெறும் நிலை யுள்ளவர்களையுமே மாணவர்களாகச் சேர்த்துக்கொள்ளுகின்றனர். தமிழ்ப் புலவர்களையும் மாணவர்களாக எடுத்துத் தமிழிலேயே கற்பித்து உழவுபற்றிய விரிவுரையாள ராக்கினால் உழவுக் கல்வி பரவும். பதிவு மன்றங்களில் எழுத்தாளர்களாகவும் எடுத்துக்கொள்ளலாம். இத் தொழில்களெல்லாம் தமிழ் கற்றார்க்குக் கிடைக்கு மென்பது உறுதியானால், வயிற்றுப் பிழைப்புக்கேனும் பலர் தமிழ் கற்பர். இத்தனைக்கும் அரசினரை இணங்கச்செய்தல் வேண்டும்.

எல்லாவற்றிற்கும் பணம் வேண்டும். பணம் பத்தும் செய்யும். பணமின்றி யென் செய்வது? நம் நாட்டுச் செல்வர்களும் நாட்டுக்கோட்டை வணிகர்களும் மணவினை பிணவினைகட்கும், பட்டங்கட்கும், மற்றுள்ள வீண் செயல்கட்கும், எத்தனையோ பெரிய கோயில்கள் பழுதுறாமல் அழகாக இருப்ப அவற்றை மேலு மேலும் பெருக்கிக் கட்டுதற்கும் ஏராளமான பொருளைச் செலவு செய்கின்றனர், வாரி யிறைக்கின்றனர். இவர்கள் செலவிடும் தொகையில் ஒரு பகுதியேனும் இக்கழகத்தின் காப்புப் பொருளுக்கும், கல்லூரி நடாத்துதற்கும், நல்ல நூல் வெளியீடுகட்கும் உதவுவரேல் நம் நாடு பொன்னாடாமே!

செல்வர்களே! நுங்களால் இயன்ற அளவு இக்கழகக் காப்புப் பொருளுக் குதவுமின்; நூல் வெளியீடுகட் குதவுமின்; அயல் நாடுசென்று தமிழையும் தமிழர் கடவுட் கோட்பாட்டையும் பரப்பும் அறிஞர்கட் குதவுமின்; தமிழ் கற்கும் மாணவர்கட் குதவுமின். நுங்கள் புகழ் பல்லாண்டு பல்லாண்டு நிலைநிற்கும். முந்துமின்! முந்துமின்!!

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

## மன்னன் (உம)

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள்]

பண்டைத் தமிழ் மக்கள் மன்னன் என்ற தமிழ்ச் சொல்லைத் தாங்கள் வணங்கி வந்த கடவுளுக்கு வழங்கி வந்தார்கள். அவர்கள் அப்படி வழங்கி வந்ததற்குக் காரணமாயுள்ள கருத்துக்கள் இக்கட்டுரையில் இயன்றவாறு ஆராயப்படும்.

2. மன்னன் என்ற சொல் 'மன்' என்ற பகுதியும், 'அன்' என்ற உயர்திணை ஆண்பாற் படர்க்கை விகுதியும் சேர்ந்து ஆகியது. 'மன்' 'அன்' உடன் சேருங்கால் னகரவொற்று இரட்டியது.

3. மன் என்பது நிலைபெறு என்று பொருள்படும். மன்னன் என்பது நிலைபெறுகிறவன், நிலைபேறு உடையவன் என்று பொருள்படும். ஒரு பொருள் தன்னிற்றானே நிலைபெறுதலையுடையதா யிருக்கலாம்; அல்லது வேறொரு பொருளினாலே நிலைபெறுத்தப்படுவதா யிருக்கலாம். கடவுள் நிலைபேறு உடையவன் என்றால் அவன் தன்னிற்றானே நிலைபேறு உடையவன்; தன்னின் மிக்காரும் தன்னை யொப்பாரும் இல்லாத மேலான உயிர்ப்பொருள். அவன் யாதொரு மாறுதலும் அடையாமை நிலைபேறுடைமையின்கண் அடங்கியுள்ளது. அவனுக்கு இந்த மாறுதலில்லாத நிலைபேறு உடைமை எதனால் வந்தது? அவன், பிறப்பும் இறப்பும் இல்லாமையினால் அவன் நிலைபேறு உடையவனாகின்றான். ஏன் அவனுக்குப் பிறப்பு இறப்பு இல்லையென்றால், அவன் அநாதியே மலமில்லாதவனாதலின் பிறப்பு இறப்புகள் வேண்டப்படுவன் அல்லன். பிறப் பிறப்பு இல்லாதவன் என்று எதிர்மறையில் கூறுதல் உடன்பாட்டில் என்றும் உள்ளவன் என்பது ஆகும். என்றும் உள்ளவன் என்ற சொற்களில் அடங்கிய கருத்தைச் சுருக்கமாக 'உள்ளது' அல்லது 'உண்மை' என்று கூறப்படும். "என்றும் உள்ள பொருள்" சுருக்கமாக, 'உண்மைப் பொருள்' அல்லது 'உண்மை' என்றும் 'மெய்ப்பொருள்' அல்லது 'மெய்' 'என்றும்' வாய்மை என்

றும் கூறப்படும். அப்பொருள் வடமொழியில் சத்து என்றும் நித்தியப் பொருள் என்றும் கூறப்படும். ஆகவே, மன்னன் என்ற சொல்லாற் பெறப்படும் கருத்துக்கள் 'உள்ளது' 'உண்மை' 'மெய்', 'வாய்மை', என்ற தமிழ்ச் சொற்களாலும் சத்து, நித்தியப் பொருள் என்ற வட சொற்களாலுங் குறிக்கப்படுகின்றன.

4. மன் என்ற முதனிலைச் சொல்லே கடவுளைக் குறித்தலும் வழக்கிலுண்டு.

5. கடவுள் நிலைபேறு உடைய பொருள் ஆகவே, வேறு நிலைபேறு இல்லாத பொருள்கள் உளவா? இருந்தால் அவை எவை? என்ற கேள்விகள் இதைப்பற்றி நினைக்கிறவர் உள்ளத்தில் எழும். பண்டைத் தமிழர் கொண்ட மூன்று பொருள்களில் கடவுள் நீங்கலாக ஏனை உயிர்ப் பொருள்களும் உயிரில்லாத உலகப் பொருள்களும் உள. உயிரில்லாத உலகப் பொருள்கள் நிலையின்றி அடிக்கடி மாறிக்கொண் டிருத்தலை நாம் கண்கூடாகப் பார்க்கின்றோம். உயிர்ப் பொருள்களும், நமது கண்முன்னே பிறந்தும் இறந்தும் மாறி வருதலைக் காண்கின்றோம். சகல நிலையில் அதாவது உடலோடு கூடிய நிலையில் உயிர்களும் நிலைபேறு உடைய பொருள்கள் அல்ல. ஓர் அளவு பட்ட கால எல்லையில் உயிர்ப் பொருள்களையும் உயிரில்லாத பொருள்களையும் நிலைபெறச் செய்கிறவன் கடவுளே ஆவன். அவன் உதவியின்றி அவ் விருவகைப் பொருள்களும் உளவாகா. ஒரு கால எல்லை வரையும் நிலைத்துமிரா. ஆதலின், மன்னன் என்ற சொல் உயிர்ப் பொருள்களையும் உலகப் பொருள்களையும் நிலைக்கச் செய்கிறவன் என்ற பிறவினைப் பொருளிலும் பண்டைத் தமிழ் மக்களால் வழங்கப்பட்டு வந்தது. கடவுள் உயிர்ப் பொருள்களை அவைகள் செய்த வினைப்படி ஒரு கால எல்லையில் நிலைக்கச் செய்தல், அவைகள் தன்னைச் சேர்ந்து எப்பொழுதும் நிலைபெறச் செய்தற்காகவே ஆகும். உயிரில்லாத உலகப்பொருள்கள் யாதொரு பயனையும் அடையத் தக்கவையல்லவாதலின் அவைகளை ஒருகால எல்லையில் நிலைக்கச் செய்தலும் உயிர்ப் பொருள்களின் பொருட்டாகவேயாகும்.

இவ்விருவகைப் பொருள்களும் நிலையில்லாமல் மாறிக்கொண்டிருக்கும்படிக் கடவுள் செய்தது பகுத்தறிவுடைய மக்கள் அந்நிலையின்மையைத் தங்கள் அனுபவத்தில் அறிந்து உணர்ந்து நிலையுள்ள பொருளாகிய தன்னை அடைய வழிகாட்டும் பொருட்டேயாகும்.

6. நிலைத்திருக்கிறவன் என்ற பொருளில் மன்னன் என்ற சொல்லைப் போல, 'உள்ளது', 'உண்மை', 'வாய்மை' என்ற தமிழ்ச் சொற்களும் வழங்கப்பட்டு வந்தாலும் பின்னைய சொற்கள் முன்னைய சொல்லைப் போல நிலைக்கச் செய்கிறவன் என்கிற பிறவினைப் பொருளில் வழங்கப்படவில்லை.

7. பிறவினைப் பொருளில் வழங்கப்பட்ட மன்னன் என்ற சொல்லில் ஆளுதல் என்ற கருத்தும் அடங்கியுள்ளது; ஆளுதல் இன்றி நிலைக்கச் செய்தல் முடியாதாதலின், கடவுள் உயிர்களை ஆளுதல் செய்து அவைகளை நல்வழிப்படுத்தித் தன்னை அடையச் செய்து நிலைபேருன இன்பத்தை நுகரச்செய்கிருனுதலின் அவனை ஆண்டான் என்று சைவசமய நூல்கள் கூறுகின்றன ஆண்டான் என்ற சொல்லினுல் பெறப்படும் கருத்துக்கள் முன்னே அச் சொல்லைப் பற்றிய கட்டுரையிற் (செந்தமிழ்ச் செல்வி 8-வது சிலம்பு 6-வது பரல் 351-வது பக்கம் பார்க்க) கூறப்பட்டன,

8. மன்னன் என்ற சொல் கடவுளுக்குப் பெயராகத் தமிழ்த் திரு மறை நூல்களிற் பல இடங்களில் வழங்கப்பட்டு வந்துளது. அவற்றுள் சிலவற்றை இங்கே குறிப்பிடுவாம். அதன் பரியாயப் பெயர்களாகிய வேந்தன், அரசு, காவலன் என்ற சொற்களும் திருமறை நூல்களில் வழங்கப்பட்டிருக்கின்றன.

1. அவர் பூணரையர்க் காதியாய வடன் மன்னனுள் மண்மேல்.
திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பிரமபுரம் தேவாரம் 6-வது பாட்டு.

2. மன்னனவ னுலகிற் கொரு மழையானவன்.
திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்புள்ளமங்கைப் பதிகம் 6-வது பாட்டு.

3. வேந்தாகி விண்ணவர்க்கு மன்னவர்க்கும் நெறிகாட்டும் விகிர்தனுகி.

திருஞானசம்பந்த சுவாமிகள் திருவையாற்றுப் பதிகம் 6-வது பாட்டு.

4. இன்னங் கேண்மி னிளம்பிறை சூடிய மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் காலைப் பாராயணம் 9-வது பாட்டு.

5. திருக்கோளிலி மன்னனே யடியேனை மறவலே.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கோளிலிப் பதிகம் 1-வது பாட்டு.

6. தென்னவ னெனையாளுஞ் சிவனவன்—மன்னவன்.

திருநாவுக்கரசு சுவாமிகள், திருக்கடம்பூர்த் தேவாரம் 5-வது பாட்டு.

7. மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருமழபாடி தேவாரம் 1-வது பாட்டு.

8. வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருக்குருகாவூர் தேவாரம் 7-வது பாட்டு.

9. மன்ன வெம்பிரான் வருக.

திருவாசகம் திருச்சதகம் 99-வது பாட்டு.

10. ஆரூரமர்ந்த அரசே போற்றி.

திருவாசகம் போற்றித் திருவகவல் 147-வது வரி.

11. காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே.

திருவாசகம் சிவபுராணம் 78-வது வரி.

12. மனவாசகங்கெட்ட மன்னனை நாடே.

திருமந்திரம் 85 தந்திரம் மகா வாக்கியம் 8-வது பாட்டு.

9. மன்னன் என்றசொல் உயிர்களை நிலைக்கச் செய்கிறவன் என்ற பொருளில் கடவுளுக்கு வழங்கப்பட்டு வந்தபின், கடவுள்

வேலையை ஏகதேசமாய்ச் செய்கின்ற உலகிலுள்ள மன்னர்களுக்கும் வழங்கப்பட்டு வந்தது. அரசன் தன் ஆணைவழி நடக்கும் மக்களுக்குப் பெரிய பதவி ஈந்தும் பொருள் கொடுத்தும் இன்பம் அடையச் செய்தும், தன் ஆணைவழி நடவாதாரைச் சிறையிலிட்டுத் துன்புறுத்தியும் அவர்களை நல்வழிப் படுத்துகின்றான். அரசன் இவ்வாறு செய்தல் கடவுள் தன் ஆணையாகிய அறவழியில் நடக்கும் மக்களை இவ்வுலக வாழ்விலும் துறக்க உலகத்திலும் இன்பந் துய்க்கச் செய்தும் இவ்வுலக வாழ்விலும் நிரய உலகத்திலும் துன்பம் நுகரச் செய்தும் வினைப்போகங்களை ஊட்டி நல்வழிப்படுத்தலுக்கு ஒப்பானதாயிருக்கின்றதாதலின் அரசன் கடவுள் ஆணையினால் உலகில் மக்களை இன்ப துன்பங்கள் நுகரச் செய்து நல்வழிப்படுத்தும் அதிகாரி யாகின்றான். அவ்வாறு நல்வழியில் நடக்கும் மக்களை அதன்கண் ஊக்கியும் அறியாமையினால் தீயவழியில் நடக்கும் மக்களை ஒறுத்தும் நல்வழிப்படுத்துதற்கண் கடவுளுக்கு அரசன் ஒருபுடை ஒப்பாயிருத்தலின் கடவுளுக்கு வழங்கப்பட்ட மன்னன் என்ற சொல் அரசனுக்கும் வழங்கப்பட்டு வந்தது. இக் கருத்து,

> தத்தஞ் சமயத் தகுதி நில்லாதாரை
> அத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
> யெத்தண்டமுஞ் செய்யு மம்மையி லிம்மைக்கே.
> மெய்த்தண்டஞ் செய்தல் வேந்தன் கடனே.

என்று திருமந்திரத்திற் கூறப்பட்டிருத்தல் காண்க. சிவஞான சித்தியார் 2-வது சூத்திரம் 31, 32 பாட்டுக்களிலும் இக்கருத்து கூறப்பட்டிருத்தல் காண்க.

10. பழைய சங்க நூல்களில் மன்னன் என்ற சொல் அரசனுக்கு வழங்கப்பட்டு வந்துள்ளது. தமிழ்த் திருமறை நூல்களிலும் அச்சொல் அரசனுக்கு வழங்கப்பட்டு வந்திருக்கிறது. அச்சொல் மன்னனுக்குப் பொதுவாய் வழங்கப்பட்டு வந்ததுமன்றித் தமிழரசர்கள் வணங்கும் கடவுளாகிய சிவபிரான் முற்காலத்தில் தமிழ் மன்னர்களாயிருந்த சேரசோழ பாண்டிய மன்னர்களாகவே கூறப்பட் டிருக்கின்றான்.

மாணிக்கவாசக சுவாமிகள் குயிற்பத்தில்,

"உன்னை யுகப்பன் குயிலே வுன்றுணைத் தோழியுமாவன்
பொன்னை யழித்த நன்மேனிப் புகழிற்றிகழு மழகன்
மன்னன் பரிமிசைவாழ் வள்ளல் பெருந்துறைமேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங்கன் வரக் கூவாய்"

என்று திருப்பெருந்துறை மேவிய சிவபிரானைத் "தென்னவன்," 'சோழன்', 'சேரன்', என்றே கூறியிருக்கிறார். திருநாவுக்கரசு சுவாமிகள் சிவபிரானைப் பாண்டிய அரசனாக "தென்னனெனை யாளுஞ் சிவன்', என்று திருக்கடம்பூர்த் தேவாரம் 5-வது பாட்டில் கூறியருளினார். மன்னர்கள் பொதுவாக உலகில் கடவுளுடைய பிரதிநிதிகளா யிருத்தலின் சிவபிரான் தமிழ்நாட்டு மன்னர்களாகிய சேர சோழ பாண்டியராகிய மூவர்கள் பேராலும் அழைக்கப்பட்டான். சிவபிரான் மலயத்துவச பாண்டியனது திருமகளாய் அவதாரஞ் செய்த உமாதேவியாரை மணந்து மதுரையில் பாண்டிய மன்னனாக, ஆளுகை செய்த காரணத்தால் அவன் 'தென்னன்' (பாண்டியன்) என்று சிறப்பாக அழைக்கப்பட்டான். திருமால் காப்புக்கடவுளாதலின் திருவாய்மொழி,

"திருவுடை மன்னரைக் காணிற் திருமாலைக் கண்டேனே"

என்று கூறுகின்றது.

---

# தொல்காப்பியச் சூத்திரக் குறிப்புரை

[வித்துவான். திரு. G. தேவநேசன் அவர்கள்]

(௪௭௯-வது பக்கத் தொடர்ச்சி)

சொற்கள் எங்ஙனம் நிலைமாறினும் புணர்ச்சி செய்யுங்கால் சொற்றொடர்ப்படியே செய்யவேண்டும். அஃதன்றி ஒன்பது+பத்து=தொண்ணூறு, ஒன்பது+நூறு=தொள்ளாயிரம் எனப் புணர்த்து விகார விதியுங் கூறுதல் புணரியலொடு மாறுபடுவ தொன்றாம்.

5.　　“ஒன்பான் முதனிலை முந்து கிளந்தற்றே
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ ஆகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகரம் ஒற்றும்”
(தொல்-எழு-குற்-சூ. 58.)

இதுவுமது.

6.　　“நும்மென் ஒரு பெயர் மெல்லெழுத்து மிகுமே”
“அல்லதன் மருங்கிற் சொல்லுங்காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இய்யிடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பால் மொழிவயின் இயற்கை ஆகும்”
(தொல்-எழு-புள்-சூ 30, 31.)

இவற்றைப் பிரயோகவிவேக நூலார் பற்றுக்கோடாகக் கொண்டு,

“இனித் தொல்காப்பியரும், தமிழில் ‘எழுவாய்வேற்றுமை பெயர் தோன்று நிலையே’ என்றாராயினும், வடநூலில் எழுவாய்வேற்றுமை இவ்வா றிருக்குமென் றறிதற்கு நும் என்னுமொரு பெயரை மாத்திரம் எழுவாய்வேற்றுமை யாக்காது பிராதிபதிக யாக்கி, பின்னர் நும்மை நுங்கண் என இரண்டு முதல் எழிறுதியும் வேறுபடுத்து வேற்றுமை யாக்கினாற் போல, ‘அல்லதன் மருங்கிற் சொல்லுங்காலை’ என்னுஞ் சூத்திர விதி கொண்டு நீயிரென வேறுபடுத்து, எழுவாய்வேற்றுமை யென்னும் பிரதமாவிப்த்தி யாக்குவர். இவ்வாறு நின், தன், தம், என், எம், நம் என்பனவற்றையும் பிராதிபதிகமாக்கி, பின் நீ, தான், தாம், யான், யாம், நாம் எனத் திரிந்தனவற்றை எழுவாய் வேற்றுமை யாக்காமையானும், ‘எல்லா நீயிர் நீ’ எ-ம். ‘நீயிர் நீயென வரூஉங் கிளவி’ எ-ம் பெயரியலுள் பெயர்ப் பிராதிபதிகமாகச் சூத்திரஞ் செய்தலானும், ‘அல்லதன் மருங்கிற் சொல்லுங்காலை’ என்னுஞ் சூத்திரத்தை வடமொழிக்கு எழுவாய் வேற்றுமை இவ்வா றிருக்குமென்று தமிழ்

நூலார் அறிதற்கே செய்தாரென்க. நிலைமொழி விகாரமொழி எட்டாம் வேற்றுமை யானுற்போல நும்மென்னு நிலைமொழி விகாரம் முதல்வேற்றுமையா மென்க'' எனக் கூறியுள்ளார்.

(பிர-சூ. 7 உரை)

நீயிர் என்னும் முன்னிலைப்பன்மைப்பெயர் வேற்றுமைப்படும்போது நும் என்று திரியுமேயன்றி, நும் மென்னும் வேற்றுமைத் திரிபுப் பெயர் நீயிரென்று திரியாது.

| முன்னிலைப் பெயர்கள் | வேற்றுமைத் திரிபு |
|---|---|
| நீன்—நீ | நின்—நுன்—உன் |
| நீம் | நும்—உம் |
| நீம்+கள்=நீங்கள் | நுங்கள்—உங்கள் |
| நீ+இர்=நீயிர், நீவிர் }—நீர் | நும்—உம் |

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை இன்னும் தென்னாட் டுலகவழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற்போல நீன் என்பது நின் என்று குறுகும். நீன் என்பது இலக்கண வறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப்படுகின்றது. நீனுக்குப் பன்மை நீம் என்பது. மகரம் பன்மைப் பொருளுணர்த்தலை ஆங்கில இலக்கண நூல்களிலும் காணலாம். நீங்கள் என்பது விகுதிமேல் விகுதி பெற்ற இரட்டைப் பன்மை. நீவிர் என்பது இலக்கணப்போலி. நீயிர் என்னும் சொல்லே நீர் என இடைக்குறைந்து நின்றது. இங்ஙனமன்றி நும் என்பது நீயிர் எனத் திரியுமென்றல் ஒன்பது+பத்து=தொண்ணூறு என்றதனோ டொக்குமென்க.

7. "இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே"

"வடசொற்கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"

(தொல்-சொல்-எச்-சூ.)

இச்சூத்திரங்களால் மொழி யாராய்ச்சி சிறிது முட்டுப்படுகின்

றது. வடசொற்கள் தொல்காப்பியர் காலத்து நூல்களில் வழங்கினவாகத் தெரியவில்லை. தொல்காப்பியத்தில் வடசொல்லென் றையுறக் கிடக்கும் சில சொற்கள் செந்தமிழ்ச் சொற்களே. இடப்பெயரும் இயற்பெயருமான சில வடசொற்களே வடவெழுத் தொருவியும் ஒருவாதும் வழங்கி யிருத்தல் வேண்டும். அல்லாக்கால் தென்சொற்களே வடசொற்களாகத் திரிபுணர்ச்சியாற் கருதப்பட் டிருத்தல் வேண்டும். தொல்காப்பியர் சுருக்கமாகக் குறித்துள்ள வடசொல்லைப் பவணந்தியார் விரிவாகக் கூறிவிட்டனர்.

## வடசோல்லாகாத் தேன் சோற்கள்

ஐயன்: தந்தையைக் குறிக்கும் தமிழ் முறைப்பெயர்; அரசன், ஆசிரியன், தந்தை, அண்ணன் என்னும் நாற்குரவரையுங் கடவுளையும் அந்தணனையும் முனிவனையும் பெரியோனையும் பொதுவா யுணர்த்துவது; ஆரியன் என்பதின் சிதைவன்று. பெண்பால் ஐயை.

ஆசிரியன்: ஆசு + இரியன். ஆசு = குற்றம் இரிதல் = போக்குதல்.

அந்தணன்: "அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்
செந்தண்மை பூண்டொழுக லான்" [கும்

இராவணன்: இராவண்ணன். இரா = இருள் = கருமை.
"இருள்நிறப் பன்றியை ஏனமென்றலும்"
(தொல்-பொருள்-மரபு.)

கும்பகர்ணன்: கும்பகன்னன். கன்னம் = காது

இராக்கதன்: இரா + கதன்; கதி + அன் = கதன்.

கதி = செலவு; இரவில் செல்லுபவன்; இதே பொருளில் நிசாசரன் என்பர் வடமொழியில். நிசி = இரவு; சரம் = செலவு. இராக்கதன்—இராக்கன்—அரக்கன். ராக்ஷஸன் என்பதன் திரிபன்று. அரக்கன் என்பதற்கு அழிப்பவன் என்றும் பொருள் கூறலாம்.

இத்துணையும் சில மாதிரிக் கெடுத்துக் கூறப்பட்டன. இங்

னமே ஏனையவும். இவற்றின் விரிவை யெல்லாம் எமது 'முதற் ருய்மொழி'யிற் கண்டுகொள்க.

1. "உச்சகாரம் இருமொழிக்குரித்தே"

(தொல்-எழு-மொழி-சூ. 42)

உசு, முசு என்ற இரு சொற்களே யன்றி, பசு, கொசு முதலிய பிறவும் உச்சகார வீற்றுச் சொற்களாதல் காண்க. பசு வென்பதை ஆரியச்சிதை வென்பர் நச்சினுர்க்கினியர். அது அஃதன்று.

2. ஒன்றறி கிளவி தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி ஆகும்"

(தொல்-சொல்-கிளவி சூ.-8)

து ஒன்றுமே அஃறிணை ஒருமை விகுதியாம். ஏனைய அதன் புணர்ச்சித் திரிபாம்.

உ-ம். போ + இன் + து = போயிற்று.
போ + இன் + அ + து = போயினது.
பால் + து = பாற்று.-
தாள் + து = தாட்டு, குறுந்தாட்டு.
கண் + து = கட்டு, குண்டுகட்டு.

3. அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணுதாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே"

(தொல்-சொல்-விளி-சூ. 36)

அம்ம என்பது முறைப்பெயரோடு சிவணுமைக்கு எத் துணையோ காலஞ் சென்றிருத்தல் வேண்டும். அம்ம என்னும் முறைப்பெயர் விளியே கேட்பிக்கும் பொருளில் வரும். அம் மையும் அப்பனுமாகிய இருமுதுகுரவரும் ஒருவர்க்கு முன் னறி தெய்வமும் இன்றியமையாதவருமாதலின், அவர் பெயரே பெரும்பாலும் விளி, வியப்பு, முறையீடு முதலிய பொருள் களில் வரும்.

உ-ம். அம்மை—அம்மே! அம்மா!
ஐயன் —ஐய! ஐயோ!
அன்னை—அன்னே! அன்னா!
அப்பன்—அப்பா!
அச்சன்—அச்சோ!
அத்தன்—அத்தோ! அந்தோ! (மெலித்தல்).

4. "ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்"

(தொல்-சொல்-விளி-சூ.-20)

இது முன்னர்க் கூறப்பட்டது.

5. "ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா" (தொல்-எழு-நூல்-சூ.-32)

இதில் எ, யா கூறப்படவில்லை. எ, ஏகாரத்தினும், யா, ஆகாரத்தினும் அடங்குமெனக் கொண்டார் போலும். நச்சினார்க்கினியர் உரையும் அஃதே.

6. "ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே"

(தொல்-எழு-மொழி-சூ.-39)

இதில் நொ பகுதியாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் நோ என்பதே பகுதியாகி நொ எனக் குறுகி நிற்கும்.

| ஏவல் | இ.காலம் | நி.காலம் | எ.காலம் | பெயர் |
|---|---|---|---|---|
| நோ | நொந்தான் | நோகிறான் | நோவான் | நோய் |
| காண் | கண்டான் | காண்கிறான் | காண்பான் | காட்சி |

---

# *கடவுளுணர்ச்சி கட்டாயம் வேண்டுமா?

[திருவாளர் க. வஜ்ஜிரவேலு முதலியார் அவர்கள்]

இன்று இப்பொதுநிலைக்கழக ஆண்டுவிழாப் பேரவையில், யான் உபந்நியசிக்கப் புகும் பொருள் 'கடவுள் உணர்ச்சி

* பல்லாவரம் பொதுநிலைக் கழக விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவு.

கட்டாயம் வேண்டுமா ?' என்பது ஆகும். இப்பொருள் இஞ் ஞான்று நந்தமிழ் நாட்டில் பெரிதும் விவாதிக்கப்பட்டு வரும் பொருள்களுள் ஒன்று என்பதை நீங்கள் அறிவீர்கள். கடவுள் என்ற சொல் பொருள் அற்றது என்பது சில அன்பர்களின் உண்மையான உள்ளக் கிடக்கை; ஆகவே, அவ்வன்பர்கள் கடவு ளுணர்ச்சி வேண்டுவதில்லை எனவும், அவ்வுணர்ச்சி நம் நாட் டவர்களை அரசியல், பொருளியல், கூட்டுறவியல் முதலிய உலகியற் றுறைகளில் முன்னேற விடாமல் தடை செய்கின்றது எனவும் கருதிக் கட்டுரைகளை எழுதியும் விரிவுரைகளை நிகழ்த்தி யும் வருகின்றார்கள். அவர்கள் நிறைந்த அறிவும் நாட்டிற்குத் தொண்டியற்றுதற்கண் மிகுந்த ஆர்வமும் உடையவர்கள். ஆகவே, இப்பொருள்பற்றி ஈண்டு விரிவுரை நிகழ்த்துதல் வேண்டற்பால தென்றே கருதுகிறேன்.

கடவுளுணர்ச்சியின் அவசியத்தை வற்புறுத்த, மேற் கூறிய அன்பர்களின் கருத்துக்கள் தவறானவை என்று விளக்கு தலையே இவ் விரிவுரையின் நோக்கமாகக் கொள்ளுகிறேன்.

உலகில் வாழும் உயிர்கள் யாவும் இன்பத்தில் விருப்பும் துன்பத்தில் வெறுப்பும் இயல்பாகக் கொள்வதை நாம் காண்கி றோம். அங்ஙனம் அவை துன்பத்தை நீக்கிக்கொள்ளவும் இன்பத்தைத் தேடிப் பெறவும் முயற்சித்து வருதலும் கண் கூடு. இக் காட்சியால் நமக்கு விளங்குவ தென்னை ? படைப் பின் நோக்கம், உயிர்கள் துன்பத்தின் நீங்கி இன்பத்தை அடை தல் என்பது பெறப்படுகின்ற தல்லவா ? ஆகவே நமக்குத் துன் பம் எதனால் உள்ளது ? அதனை நீக்கிக்கொள்ளுமாறு யாங் ஙனம்? இன்பம் எதனால் உளதாம்? அதனை நாம் பெறுவ தெப் படி ? என் றின்ன பல்வகையான் நாடி முடிவுகாண்டல் நம் கடமை யாகும்.

இன்பமும் துன்பமும் எவற்றான் உண்டாகின்றன ? இன் பம் தரும் பொருளைத் தெரிந்து துய்த்தலானும், துன்பந் தரும் பொருளைத் தெரிந்து துவ்வாது விடுத்தலானும் நமக்கு இன் பம் உண்டாகும்; இவ்வாறன்றித் துன்பந்தரும் பொருளை

இன்பந் தருவதென மாறி உணர்ந்து துய்த்தலானும் இன்பந் தருவதனைத் துன்பந் தருவதெனக் கருதித் தள்ளுதலானும் துன்பம் உண்டாம். இதனுல் இன்பந்தரும் பொருளை உள்ளவா றறிதற்கு ஏற்ற அறிவும் அவ் வறிந்த பொருளை விரும்பியவாறு எய்துதற்குரிய செய்கையும் இன்பத்திற்குக் காரணம் எனவும், பொருள்களி னியல்புகளை உள்ளவாறன்றிப் பிறழ்ந்து அறிவ தாகிய மயக்க உணர்வும் குறைந்த ஆற்றலும் துன்பத்திற்குக் காரணம் எனவும் நாம் அறிகின்றோம்.

நாம் இப்பொழுது நுகர்ந்து வருவது இன்பமா? துன்ப மா:? எனின் நாம், துன்பமின்றி இருப்பின் அதனி னீங்குதற் காக முயற்சித்தல் வேண்டுவதில்லை; இன்பத்தைத் துய்த்துக் கொண் டிருப்போமே யானுல் வேறும் இன்பம் பெறுதற்காக முயற்சித்தல் வேண்டுவதில்லை. ஆகவே நமக்குத் துன்பம் உள் ளது; இன்பமில்லை; ஓரோவழி இன்பம் துய்க்கினும் அது குறைந்த அளவினதாய் அழிவதாய் உள்ளது. இவ் வுலகிலுள்ள பொருள்களால் நாம் எய்துவது இம்மட்டுமே ஆகும். அப் பொருள்கள் யாவும் இன்ப துன்ப மயக்கவடிவாயுள்ளன. அவை ஒவ்வொருகால் இம் மூன்றனுள் ஒன்றை முற்படத் தந்து மற் றிரண்டையும் பின் தருகின்றன. அன்றியும் இப் பொருள் களுள் இஃதின்பந் தருவது; இது துன்பந் தருவதென அறிதற் குரிய நம் அறிவும் தூயதாய் நிறைந்ததாய் இல்லை; அறிந்த பொருள்களை நாம் விரும்பியபடித் துய்க்கவும் துவ்வாது நீக்கவும் போதுமான ஆற்றலும் உடையோ மல்லோம். ஒன்றை நினைக் கின் அது வொழிந்திட் டொன்ருகின்றது; அன்றி அது வந்தெய்தி னும் எய்துகின்றது இத்துன்ப உலகின்கண். ஆதலினு லன்ருே ஆன்ருேர்கள் ஆங்காங்கே இப் பிறப்பைப் பற்றி,

> ‘பிறந்தாருறுவது பெருகிய துன்பம்
> பிறவாருறுவது பெரும்பே ரின்பம்’

என்றும்,

> “மாணு (இன்பமில்லாத)ப் பிறப்பு”

என்றும்,

"தோன்றி நின் றழியப்படுங் கொடும் பிறப்பிற் றுன்பமே
ஊன்றி நெஞ்சகத் தோர்ந்திடிற் பிறிதிலை"

என்றும் அறிவித்துச் சென்றூர்கள்?

இங்ஙனமாகலின், இப்பிறப்பு மிகுந்த துன்பத்தைத் தருவது; அன்றி இதன்கண் இன்பம் எய்தினும் அது சிறிய அளவினதாய், அழிவதாய்த், தூய்மை யில்லாததாய்த் துன்பக் கலப்புடையதாய் உள்ளது என்பன பெறப்படுகின்றன. இனி இவ்வுலக இன்பம் போலாது வரம்பில்லதாய், நிலைத்ததாய்த், தூயதாய்த் துன்பக் கலப்பில்லதா யுள்ள இன்பம் எது? இப்பிறப்பின் நீங்கி அவ்வின்பத்தை அடையுமாறு யாங்ஙனம்? அவ் வின்பந்தான் ஈறில்லாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பம்! அவனே இறைவன்!! அவனே இன்பப் பெருமான். இப் பேரின்ப வடிவினனாகிய பெருமானே கடவுள் என் றழைக்கப்படுகின்றான்.

ஆனால் இங்கு ஓர் ஐயம் உண்டாகின்றது. இக் கடவுள் என்றொரு பொருள் உண்டா? இருந்தால் அதைக் காட்ட முடியுமா? என்பன இஞ்ஞான்று யாண்டும் எழுந்து நிலவும் வினாக்கள். இவ்விரு வினாக்களுள் முன்னையதற்குக் 'கடவுள் என்றொரு பொருள் உண்டு. அது தன்வயமும், தூய உடம்பும், இயற்கை யுணர்வும், முற்றறிவும், இயல்பாகவே பாச நீக்கமும், பேரருளும், முடிவிலாற்றலும், வரம்பி லின்பமும் உடைய பொருள். 'பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள்' என்று விடை கூறுகின்றேன்.

கடவுளுண்மையைப்பற்றி விவாதித்தலை நான் இங்கு மேற்கொள்ளப் புகவில்லை. கடவுளுண்மையை வெள்ளறி வுடையார்க்கும் இனிது விளங்கும்படிப் பெரியோர்கள் செய்து வைத்திருக்கின்றூர்கள் என்றதை மாத்திரம் குறிக்க விரும்புகிறேன்.

'அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்று திருக்குறள் தொடங்குகின்றது.

இதன் பொருள்,

" எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன ; அதுபோல உலகும் ஆதிபகவனை முதல்வனாக உடையது "

" அவன் அவள் அதுஎனும் அவை மூவினமையின்
தோற்றிய திதியே ; ஒடுங்கி மலத்து உளதாம் ;
அந்தம் ஆதி என்மனார் புலவர் "

என்று சைவ சித்தாந்தம் தொடங்குகின்றது.

இதன் கருத்து சுருக்கமாகக் கூறின்,

" இக் காணப்பட்ட உலகம் சடமாய்ப் பலவாய் உள்ளது. நம் அறிவினால் இது, இது என்று சுட்டி உள்ளதாய் அறியப் படுகின்றது. ஆகவே இது தோற்றம் நிலை இறுதி என்ற முத் தொழிலையும் உடையது. இது இல்பொருளும் ஆகாது; உள் பொருளே யாகும். ஆயினும் பருநிலையினின்று நுண்ணிய நிலையையும் நுண்ணிய நிலையினின்று பருநிலையையும் முறை யானே அடைதல் பற்றியே இது தோற்றமும் இறுதியும் உடைய தாகக் கூறப்படுகின்றது. ஆகவே, இவ்வாறு உள்பொரு ளாய்ச் சடமாய்த் தோன்றி நின்றழியும் காரியமா யிருத்தலின் இது ஒரு அறிவுடைய நிமித்த காரணனாலேயே காரியப்பா டாகிய இச் செயற்கை நிலைகளை எய்தியதாதல் வேண்டும். அன்றியும் இது தோன்றுங்கால் தான் முன் ஒடுங்குதற்கு இட மாகி நின்ற முதல்வனிடத்திலிருந்தே தோன்ற வேண்டு மாத லின், இவ்வுலகிற்கு அந்தத்தைச் செய்யும் கடவுளே முதற் கடவுள் ஆதல்வேண்டும் " என்பது ஆகும். இதனை உணர் தற்கு ஞானம் வேண்டாம். இச்சூத்திரத்தில் கூறியவாறே இவ்வுலகத்தின் காரணங்களைப்பற்றி ஒழுங்காக ஆராய்ந்து பார்த்தால் இவ்வுலகத்திற்கு முதல்வனாகிய கடவுள் ஒருவன் உண்டு என்ற முடிவிற்கு ஐயமின்றி யாவரும் வரக்கூடும் என்று நான் துணிவாக எண்ணுகிறேன்.

இது உலகாகிய புறத்துப் பொருளைக்கொண்டு கடவு ளுண்மையைத் துணிவதாகும்; ஆகவே இது புறச்சான்றே ஆகும். இருப்பினும் இது, நம் வாழ்க்கையில் நாடோறும்

"தோன்றி நின் றழியப்படுங் கொடும் பிறப்பிற் றுன்பமே
ஊன்றி நெஞ்சகத் தோர்ந்திடிற் பிறிதில்லை"

என்றும் அறிவித்துச் சென்றார்கள்?

இங்ஙனமாகலின், இப்பிறப்பு மிகுந்த துன்பத்தைத் தருவது; அன்றி இதன்கண் இன்பம் எய்தினும் அது சிறிய அளவினதாய், அழிவதாய்த், தூய்மை யில்லாததாய்த் துன்பக் கலப்புடையதாய் உள்ளது என்பன பெறப்படுகின்றன. இனி இவ்வுலக இன்பம் போலாது வரம்பில்லதாய், நிலைத்ததாய்த், தூயதாய்த் துன்பக் கலப்பில்லதா யுள்ள இன்பம் எது? இப் பிறப்பின் நீங்கி அவ்வின்பத்தை அடையுமாறு யாங்ஙனம்? அவ் வின்பந்தான் ஈறில்லாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பம்! அவனே இறைவன்!! அவனே இன்பப் பெருமான். இப் பேரின்ப வடிவினனாகிய பெருமானே கடவுள் என் றழைக்கப்படுகின்றான்.

ஆனால் இங்கு ஓர் ஐயம் உண்டாகின்றது. இக் கடவுள் என்றொரு பொருள் உண்டா? இருந்தால் அதைக் காட்ட முடியுமா? என்பன இஞ்ஞான்று யாண்டும் எழுந்து நிலவும் வினாக்கள். இவ்விரு வினாக்களுள் முன்னையதற்குக் 'கடவுள் என்றொரு பொருள் உண்டு. அது தன்வயமும், தூய உடம்பும், இயற்கை யுணர்வும், முற்றறிவும், இயல்பாகவே பாச நீக்கமும், பேரருளும், முடிவிலாற்றலும், வரம்பி லின்பமும் உடைய பொருள். 'பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள்' என்று விடை கூறுகின்றேன்.

கடவுளுண்மையைப்பற்றி விவாதித்தலை நான் இங்கு மேற்கொள்ளப் புகவில்லை. கடவுளுண்மையை வெள்ளறி வுடையார்க்கும் இனிது விளங்கும்படிப் பெரியோர்கள் செய்து வைத்திருக்கின்றார்கள் என்றதை மாத்திரம் குறிக்க விரும்புகிறேன்.

'அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்று திருக்குறள் தொடங்குகின்றது.

இதன் பொருள்,

" எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன ; அதுபோல உலகும் ஆதிபகவனை முதல்வனாக உடையது "

" அவன் அவள் அதுஎனும் அவை மூவினமையின்
தோற்றிய திதியே ; ஒடுங்கி மலத்து உளதாம் ;
அந்தம் ஆதி என்மனார் புலவர் "

என்று சைவ சித்தாந்தம் தொடங்குகின்றது.

இதன் கருத்து சுருக்கமாகக் கூறின்,

" இக் காணப்பட்ட உலகம் சடமாய்ப் பலவாய் உள்ளது. நம் அறிவினால் இது, இது என்று சுட்டி உள்ளதாய் அறியப் படுகின்றது. ஆகவே இது தோற்றம் நிலை இறுதி என்ற முத் தொழிலையும் உடையது. இது இல்பொருளும் ஆகாது; உள் பொருளே யாகும். ஆயினும் பருநிலையினின்று நுண்ணிய நிலையையும் நுண்ணிய நிலையினின்று பருநிலையையும் முறை யானே அடைதல் பற்றியே இது தோற்றமும் இறுதியும் உடைய தாகக் கூறப்படுகின்றது. ஆகவே, இவ்வாறு உள்பொரு ளாய்ச் சடமாய்த் தோன்றி நின்றழியும் காரியமா யிருத்தலின் இது ஒரு அறிவுடைய நிமித்த காரணனாலேயே காரியப்பா டாகிய இச் செயற்கை நிலைகளை எய்தியதாதல் வேண்டும். அன்றியும் இது தோன்றுங்கால் தான் முன் ஒடுங்குதற்கு இட மாகி நின்ற முதல்வனிடத்திலிருந்தே தோன்ற வேண்டு மாத லின், இவ்வுலகிற்கு அந்தத்தைச் செய்யும் கடவுளே முதற் கடவுள் ஆதல்வேண்டும் " என்பது ஆகும். இதனை உணர் தற்கு ஞானம் வேண்டாம். இச்சூத்திரத்தில் கூறியவாறே இவ்வுலகத்தின் காரணங்களைப்பற்றி ஒழுங்காக ஆராய்ந்து பார்த்தால் இவ்வுலகத்திற்கு முதல்வனாகிய கடவுள் ஒருவன் உண்டு என்ற முடிவிற்கு ஐயமின்றி யாவரும் வரக்கூடும் என்று நான் துணிவாக எண்ணுகிறேன்.

இது உலகாகிய புறத்துப் பொருளைக்கொண்டு கடவு ளுண்மையைத் துணிவதாகும்; ஆகவே இது புறச்சான்றே ஆகும். இருப்பினும் இது, நம் வாழ்க்கையில் நாடோறும்

நமக்குத் துணையாக உள்ள இவ்வுலகப் பொருள்களின் ஒழுங்கு பற்றியதாதலின் ஐயமின்றிக் கொள்ளற்பாலதே ஆகும். வேறு, கடவுளுண்மையைச் சாதிக்கும் அகச்சான்றுகளும் உள்ளன. அவையே கடவுளுண்மையைச் சாதித்தற்கு மிகச் சிறந்த கருவிகளாகும். இங்கே, கடவுளுண்மையைத் தெளிந்து அநுபவத்தாலுணர்ந்து இன்புற்ற பெரியோர்களையே நான் குறிக்கின்றேன். அவர்கள் கடவுளை அநுபவத்திற் கண்டு இன்புற்றதற்கான அடையாளங்கள் மலிந்து கிடக்கின்றன. அவர்கள் அருளிய மொழிகள் கொண்டு கடவுளை ஆராயப் புகுதல் நாம் தருக்கங் கொண்டு விவாதித்து. உணர்தலைவிட எவ்வளவோ உயர்ந்தது. நம் அறிவால் நாடி முடிவு காண்டலைவிட அது எத்தனையோ மடங்கு பயன் தருவதாகும். நாம் சாஸ்திர ஆராய்ச்சியினாலும் அளவைநூல் நியாயம் கொண்டும் தெரிந்துகொள்வதைவிட மிக விளக்கமாகவும் தெளிவாகவும் சமயாசாரியர் முதலிய அறிஞர் அருள் மொழிகள் கொண் டறிந்துகொள்ளலாம். இப்பெரியோர்களின் அருள் வாக்குக்களே கடவுளுண்மையை அநுபவசித்தமாகத் தெரிவிப்பன (Experimental evidence).

மூன்றாவதாக எனைத்துவித மறுப்புக்கள் தோன்றினும் கடவுளுண்மை மக்கட் பகுதியிற் பெரும்பான்மையோராற் கொள்ளப்பட்ட ஒருண்மையாகும். இதனைப் பிறிதொரு நியாயங்கொண்டு விளக்க வேண்டுவதில்லை. உலகில் மக்கள் தோன்றியது முதல் நாகரிகம் பெற்றோர் பெறாதோர் ஆகிய எத்தகைய குழுவினரிடத்தும் இக் கடவுளுண்மை யுணர்வு தோன்றி வளர்ந்து வருகிறது. ஒவ்வொரு மக்கட் குழுவும் தன் தன் அறிவு நிலைக்கேற்ப அக் கடவுளைச் சில பொருள்களிற் கண்டு வழிபடுதலும் கண்கூடு. இது கடவுளுண்மையைச் சாதிக்கும் உணர்வுநிலைச் சான்றாகும். (Intutional evidence)

ஆகவே, கடவுளுண்மைக் கொள்கையின்றி மக்கள் உயிர் வாழ்தல் அரிதென்பதும் கடவுளைப்பற்றிச் சிலவற்றையாயினும் தெரிந்துகொள்ள வேண்டும் என்று உணர்வுடைய ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலும் இயற்கை ஆர்வம் எழுகின்றது என்பதும் விளக்கமாகின்றன.

இனி, அக் கடவுளைக் காட்ட முடியுமா? என்ற கேள்வியை எடுத்துக்கொள்வோம். இது வினாவே யன்று. நம்மால் அறியப் படும் பொருள்கள் பல உள்ளன. அங்ஙனமின்றி வேறொன்றாற் றான் அறிதற் குரியனவாய் உள்ள பொருள்களும் உள்ளன. இவற்றுள் பின்னையன முன்னையனபோல அறிய வரமாட்டா. முன்னையனவுங்கூட எல்லாப் பொருள்களையும் எல்லா வகையா லும் அறிதற்குரிய நிலையில் இல்லை. பொருள்களை அறிதற்குக் கரு விகளாகிய கண் முதலிய புற இந்திரியங்கள், உள்ளம் முதலியன யாவும் தத்தமக்கு யோக்கியமாகிய பொருள்களையே நம் அறிவிற் குக் காட்டும் ஆற்றல் உடையன. ஒரு கருவியா னறிதற் குரிய தைப் பிறிதொன்றா னறியமுடியாது. நாவா லறிதற்குரிய தொன்றைக் கண்ணாலறிய விரும்பின் அவ்விருப்பம் எங்ஙனம் கைகூடும்? கற்கண்டிற்கு இனிய சுவையுண்டு எனின், அச்சுவை யிருப்பின் என் கண்ணிற்குக் காட்டென்றலா அறிவுடைமை? அதனை எவ்வா றநுபவிக்க முடியுமோ அவ்வாறு அநுப விக்க முயலலே அறிவுடைமை. அன்றியும் 'அன்பு' என்ற கருத்துப் பொருளைக் கண்ணிற்குக் காட்டு என்றால் எங்ஙனங் காட்ட இயலும்? அதனை உள்ளத்தாலேயே கருதி யுணர வேண்டும்.

கடவுள் அழிவில்லாத பொருள். ஆகவே அதன்கண் அழி பொருள்களுக்கு உள்ள இயல்புகள் இருக்கமாட்டா. நம் அறிவு அழிபொருட் டன்மைகளையே சிறிது சிறிது அறியும் திறம் வாய்ந்தது. நம் அறிவினால் நமக்கு வேறாய் இது என்று சுட்டி அறியப்படும் பொருள் யாவும் அழியும். "அறிவினா லறிந்த யாவும் அசத்தாதல் அறிதி" என்ற திருவாக்கை உன்னுக. ஆகவே, கடவுள் அழியாப் பொருளாகலின் அவன் இவ்வாறு அறியப்படான்; அவன் மாற்ற மனங்கழிய நின்றவன். இப் பொருள் பற்றியே அவனுக்குக் கடவுள் என்ற பெயரும் எய் திற்று. கடவுள்=கடந்தது; இதனாற்றான் நம் மாணிக்கவாசக சுவாமிகளும் 'மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே' என் றருளிச் செய்தார்.

இங்ஙனமாகலின், கடவுளையும் அவ னியல்புகளையும் இப்

பொழுது நமக்கு உள்ள குறைந்த அறிவு கொண்டு அறிய முடியாது. இந்த அறிவு கொண்டு அவனிருப்பையும் அவனியல் புகளாகிய இறைமைக் குணங்களி னிருப்பையும் மாத்திரம் இவை உள்ளன என்ற அந்த அளவானே முற்கூறியபடிச் சான்று கள் கொண்டு அறியலாம். இவ்வாறன்றிக் கடவுளே அநுபவ மாய், அவனியல்புக ளெல்லாம் நம்மறிவிற் றோய்ந்து முற்றும் விளங்கும்படி உணர விரும்பின் நமக்கு இவ் வறிவுநிலை நீங்கி உணர்வுநிலை வருதல் வேண்டும். அவ் வுணர்வுநிலையிற்றான் இன்பதுன்ப மயக்க வடிவமாயுள்ள இவ்வுலகப் பொருள் யாதும் நம் அறிவிற் றட்டாது முதல்வ னொருவனே நம் அறிவில் வேறி ன்றி விளங்குவன். அந்நிலையில் நமக்குத் துன்பம் சிறிதும் இன் றிப் பேரின்பம் வந்தெய்தும். இந்நிலையே நம் வாழ்க்கையின் குறிக்கோள்! இதனை உயிர்கள் எய்துதலே படைப்பின் நோக்கம்!

இந்நிலையின் நாம் எய்தும் உணர்வே மெய்யுணர் வெனப் படும். இது பரஞானம் எனவும்படும். இஃதொன்றானேயே நாம் துன்பங்களினின்று விடுதலை அடைய முடியும்.

'மொழிதலிற் பரமஞான மொன்றுமே முத்திக்கேது'

என்ற ஆன்றோர் வாக்கு ஈண்டு நினைக்கத்தக்கது. இம் மெய் யுணர்வைத்தான் ஆசிரியர் திருவள்ளுவர்

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு"

என்றார். பேதைமை என்றது மயக்க உணர்வை. பிறப்பிற்கும் பிறப்பினால் நாம் எய்தும் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் மயக்க உணர்வே ஆதலின் பிறப்பென்னும் பேதைமை என்று உபசாரத்தாற் கூறினர். சிறப்பு என்றது எப்பொருளினும் சிறந்ததாகிய வீட்டின்பத்தை; செம்பொருள் என்றது என் ஞான்றும் ஒருதன்மையனாய் நிற்கும் முதல்வனை. அம் முதல் வன் வீட்டிற்கு நிமித்த காரணமாதலை விளக்குதற்குச் சிறப் பென்னும் செம்பொருள் என்றும், அவனை அநுபவத்தால் உணர்தலே மெய்யுணர்வு என்று விளக்குதற்குச் 'செம்பொருள்

காண்பது அறிவு' என்றும், அவ்வுணர் வொன்றனையே பிறப்பின் காரணமாய மயக்க உணர்வும் பிறப்பும் நீங்கும் என்றற்குப் 'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்ப தறிவு' என்றும் கூறினர்.

இன்னும் கடவுள் இம்மெய்யுணர் வொன்றனையே அறியப்படும் என்பதை

'உணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே'
'உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே'

என்றற் றொடக்கத்து அருள் வாக்குக்களானு முணர்க.

இத்தகைய மெய்யுணர்வு நமக்கு எப்பொழுது வரும்? நம்மைச் சூழ்ந்துள்ள அறியாமை நீங்கின காலத்திற்றான் வரும். அவ்வறியாமை நீங்க வேண்டின் கடவுளைப்பற்றியும் நம்மைப் பற்றியும் அவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பைப் பற்றியும் அவனை நாம் காணுவண்ணம் நம் அறிவு செயல்களைத் தடுத்து நிற்கும் தடையைப்பற்றியும் ஆராய்ச்சி செய்தல் வேண்டும். இவ் வாராய்ச்சியான் நமக்கு உண்டாகும் உணர்வையே ஈண்டுக் கடவு ளுணர்ச்சி என்றது. ஆகவே, 'கடவுளுணர்ச்சி'யானது நாம் எல்லாத் துன்பங்களினின்றும் நீங்கிப் பேரின்பத்தை அடைதற்கு இன்றியமையாததா யுள்ள தொன்று. இவ்வுணர்ச்சி நமக்கு வேண்டுமா? வேண்டாமா? அன்பர்களே! கடவுளுணர்ச்சி வேண்டும்! ஆன்மலாபம் அடைய விரும்பும் ஒவ்வொரு மனிதனுக்கும் இது கட்டாயம் வேண்டும்!! நம் வாழ்க்கையில் நாம் முயன்று அடைந்துவரும் எவ்வகை உணர்ச்சியினும் இவ்வுணர்ச்சியே தலைசிறந்ததாய் நம் வாழ்க்கையின் பயனை விளைவிப்பதா யுள்ளது. இதனை யார்தான் வேண்டாம் என்று விலக்க முடியும்?

நான் முன்னமே கூறியபடி கடவுளுண்மைக் கொள்கையானது மக்களுட் பெரும் பகுதியினரால் கொள்ளப்பட்டு வரும் உண்மையாகும். ஆகவே, கடவுளைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற இயற்கை ஆர்வமும் உணர்வுடைய ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலும் எழுவது ஆகும். கடவு

ளுணர்ச்சியானது மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் வேண்டற்பாலதே. அவ்வுணர்ச்சியைப் பெற ஒருவன் எவ்வளவு முயன்றாலும் அம் முயற்சியைப் போதுமான அளவிற்கு மேற்பட்டதென்றாவது பயனற்றதென்றாவது கூற முடியாது. ஆனால் சிலர் கடவுளுணர்ச்சியின் பொருட்டுச் செலுத்தப்படும் காலத்தையும், செய்யும் முயற்சியையும் வீண் காலமாகவும் பயனில் முயற்சியாகவும் கருதுகின்றார்கள். அவர்கள், தாம் இவ்வுலகிற் செய்ய வேண்டிய கடமைகளெல்லாம் தம்மோடுடன் றோன்றியுள்ள பிற மக்களின் நன்மையின் பொருட்டு உழைத்தலோடு முடிவடைந்து விடுகிறதென் றெண்ணுகிறதாகத் தெரிகிறது. மனிதன் இவ்வுடலினீங்கி இறந்தபின் எந்நிலையை எய்துகிறான்? என்ற வினா அவர்கள் உள்ளத்தில் அரும்புவதில்லை போலும். ஒருவன் இறக்கும்போது எத்தகைய எண்ணங்கள் எழுந்து அவன் நெஞ்சத்தைக் கலங்கச் செய்யும் என்பதையும் அவர்கள் தம் நினைவிற்குக் கொண்டு வருவதில்லையென எண்ணுகிறேன். ஒருவனுக்கு இறந்தபின் எய்துதற்குரியனவற்றை நோக்க இவ்வுலகில் எய்தும் நிலையாத புல்லிய நன்மைகள் மிக மிகச் சிறியனவன்றோ? இறந்தபின் எய்தற்குரிய நிலைத்த நன்மைகளை அறவே மறந்துவிட்டு அழிதன் மாலைத்தாய இம்மை இன்பம் ஒன்றனையே பொருட்படுத்தி ஒழுகுதல் அறிவு உடைமை யாகாது.

கடவுளைப்பற்றி உணர்தலிற் காலங் கழிப்பின் நாம் உலகில் முன்னேற்றம் அடைய முடியாதென்று கருதுகிறார்கள். இம்மையில் நாம் எய்தும் நன்மைகளும் கடவுளுணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அன்பர்களே! ஊன்றிப் பாருங்கள். சமய ஞானமும் கடவுளுண்மைக் கொள்கையுமே யல்லவா மனிதன் பிற உயிர்களின் நன்மையைக் கருதி ஒழுக வேண்டுதலின் அவசியத்தை நிலைபெறுத்துவன? உயிர்களுக்கெல்லாந் தந்தையாகிய ஒரு முதல்வன் உளன் என்ற நம்பிக்கையினு லல்லவா மக்களிடை ஒற்றுமை யுணர்வும் சகோதரத்துவமும் பெருகித் தேசம் என்ற உணர்ச்சி (recognition of national life) யை உண்டு பண்ணுகின்றன? எல்லா உயிர்

களும் கடவுளின் மக்கள்; கடவுள் எல்லா உயிர்களிடத்தும் கலந்து உளன் என்ற எண்ணம் அன்றோ ஒருவனைப் பொது நன்மையைக் கருதித் தொண்டியற்றத் தூண்டுகின்றது? இஃதொன்றே பொது நன்மையின் பொருட்டுத் தனித்த தன்மையைப் பொருட்படுத்தாது விடுதலையும் பெரிதாகிய நாட்டிற்குச் சிறிய தன்னைத் தியாகஞ் செய்தலையையும் வளர்க்கவல்லது. இவை யெல்லாம் தேச மக்களிடை இன்றியமையாது இருக்க வேண்டிய நற்குணங்கள்.

அறமெனப்படும் நல்லொழுக்கம் ஒரு மனிதன் இவ்வுலகில் வாழ்தற்கு இன்றியமையாதது என்பது அறநூலுடையார் யாவருக்கும் உடன்பாடு. உலகத்தைப் படைத்த முதல்வனையும் அவனை அடைவிக்கும் சமயத்தையும் பொருட்படுத்தாமல் எந்த நல்லொழுக்கத்தையும் உணர முடியாது. கடவுளுணர்ச்சியின்றி நல்லொழுக்கமே நிலைபெற முடியாது. கடவுளிடத்து அன்பும் அவரது ஆணைக்கு அடங்கி ஒழுகுதலும் மக்கள் கூட்டுறவின்கண் ஒழுங்கையும் பகையின்மையையும் உண்டுபண்ணுதற்கு இன்றியமையாதன. தம்மைப் படைத்த முதல்வனைச் சிறிதும் எண்ணாத மக்கட் கூட்டத்தின் நிலையை விவரித்தலைவிட நன்றாக நினைத்துத் தெரிந்துகொள்ளலாம். ஆதலினால் கடவுளுணர்வும் கடவுள் நெறியும் உலகியலோடும் அறவியலோடும் ஒருங்கே வளர்த்தற்கு உரியன. சுவாமி விவேகாநந்தரும் இவ்வாறே தம் விரிவுரைகளில் ஒரு நாடு பொருளின்பங்களிற் சிறந்து நிலைபெறுதற்குக் கடவுளுணர்ச்சியானது இன்றியமையாதது என வற்புறுத்திக் கூறியுள்ளார்.

ஆசிரியர் திருவள்ளுவனாரும் பொருளின்பங்களாகிய உலகியலை நிலைபெறுத்துவது அறம் என்று அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தாற் கூறி அவ்வறத்திற்குக் கடவுட்கொள்கை அடிப்படையானதென் றறிவித்தற்கு அறத்துப்பாற் பாயிரவியலில் முதற்கண் கடவுள் வாழ்த்து என்பதைப் பொருளாகக் கொண்ட அதிகாரத்தைத் தொடுத்துள்ளார். இவ் வதிகாரங்களினியையும் கருத்துப்பற்றி ஒரு தனித்த ஆராய்ச்சி செய்ய வேண்டுதலின் அவ்வாராய்ச்சியில் நான் இங்குப் புக விரும்ப

வில்லை. ஆனால் இஃதொன்றனைமட்டும் இங்கு நினைவூட்ட விரும்புகிறேன்:—

இறைவன் அறத்தை வடிவாக உடையவன். அறத்திற்கு இறைவ னுயிர். இறைவன் உணர்ச்சியும் அவன்பால் அன்புமின்றிச் செய்யும் அறம் பயன்தராது; அது உயிர் நீங்கிய உடலோ டொக்கும். பொருளின்பங்கள் அப்பெற்றித்தாய் அறத்தை அடிப்படையாகக் கொள்ளுதலினால் அவை கடவுள் திருவருளாலேயே துய்த்தற்குரியன. கடவுளிடத் தன்பில்வழி அப் பொருளின்பங்கள் ஒருவனாற் றுய்க்கப்படும் பொருளாகாமல் அவனைத் தங்கண் அழுந்தச் செய்து பிணித்தலை யுடையனவாய்த் துன்புறுத்தும். ஈ முதலியன தேன் முதலியவற்றை உண்ணக் கருதிச் செல்கின்றன; ஆனால் அவை அத் தேன் முதலியவற்றால் பிணிக்கப்பட்டு உயிர் துறக்கின்றன. கடவுளுணர்வின்றிப் பொருளின்பங்களை நுகரப் புகுவோனும் இந்நிலையையே எய்துகிறான். இக்கருத்துக்க ளெல்லாம்

“அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்த லரிது”

என்ற அருமைத் திருக்குறளிற் றோன்றுவதை, அன்பர்களே, உன்னுக! உன்னுக!!

இதுகாறும் கூறியவாற்றான் கடவுளுணர்ச்சி ஆன்ம நிலையின் முற்றும் பேறுபற்றியும் அறவியல் பற்றியும் பொருளின்பங்கள் ஆகிய உலகியல் பற்றியும் மக்களுக்குக் கட்டாயம் வேண்டும் என்று ஒருவாறு விளக்கினேன். இன்னும் இதனை விரிக்க நான் விரும்பவில்லை. எனக்கு இவ்விரிவுரை நிகழ்த்தலாகிய உரிமை வழங்கி இதுகாறும் அன்பு கூர்ந்து பொறுமையோடு கேட்டிருந்த அன்பர்களாகிய உங்களுக்கு எனது செய்ந்நன்றி யறிதலாகிய வணக்கத்தைச் செலுத்துகிறேன். குற்றங்கள் நிகழ்த்தி யிருப்பின் மன்னிக்க. இதனோடு என் விரிவுரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

---

# பிரகிருதி சாஸ்திரம்

நாம் வசிக்கு மிவ்வண்டத்தினை யுற்றுநோக்குமிடத்து அதன்கணுள்ள பொருள்கள் கணக்கற்ற இயக்கங்களையு மாறுதல்களையு மேற்கொண் டிருப்பதைக் காண்கிறோம். அக்காட்சிகள் அல்லது தோற்றங்கள்[1] அகஸ்மாத்தாய்க் காரணமின்றி யொருங்குசேர்ந்த பொருட்கூட்டங்களின் சேட்டைகளென்று எண்ணக்கூடாமற் கண்ணுக்குப் புலப்படாத பிரகிருதி நியாயங்களின்பாற்பட்ட[2] சம்பந்தா சம்பந்த நிலைமைகளா லமைந்து கிடக்கின்றன. இத்தன்மையான பிரகிருதிப் பொருள்களின்[3] சம்பந்தா சம்பந்தங்களை ஆராய்ந்து கடைப்பிடித்தலே பிரகிருதி சாஸ்திரத்தின்[4] கருத்தாகும்.

பொருள்களிடத்து நீங்காச்சம்பந்த மொன்றைக் கண்டு பிடித்தபோது அவ்வொற்றுமை விளக்கத்தைப் பிரகிருதி நியாய மென்கிறோம். உதாரணமாக: பொருள்களைக் காய்ச்சினவிடத்து அவை பருக்கின்றன; இதனால் 'உஷ்ணம் பொருள்களைப் பருக்கச்செய்யு' மென்கிற வொரு பிரகிருதி நியாயத்தைக் கண்டுபிடிக்கலாயிற்று. அதுபோலவே ஒரு கடிகை மழைக் காலத்திற் போவதைப் பார்க்கிலும் வேனிற்காலத்தில் மெதுவாய்ப் போகின்றதென்கிற தோற்றத்தினை நோக்கினவிடத்துத், 'தொங்கு கருவிகளின்[5] நீளம் அதிகமாக அவற்றின் அசைவு வேகம் குறையு' மென்பதும் 'உஷ்ணம் பொருள்களைப் பருக்கச் செய்யு' மென்பதுமான பிரகிருதி நியாயங்களால் அத் தோற்றத்தி னுண்மையைக் காரணங்கொண்டு தெளிகிறோம். எல்லாப் பொருள்கட்கும் பொதுவாயிருக்கு மிவ்வகை முக்கியமானவைகளைப் பற்றியே இங்கே சற்று விரித்தெழுதக் கருதினம். அவற்றைப் 'பொருட்குணம்'[6] 'பொருள் வலி'[7] யென இரு வகைகளாகப் பிரித்து முன்னர்ப் பொருட்குணங்களை விளக்குகின்றோம்.

---

1. Phenomena 2. Laws of Nature 3. Matter 4. Natural Philosophy 5. Pendulums 6. Properties of matter 7. Forces

## பொருட்குணம்

பிரகிருதியிற் காணும் பொருள்களுக்கெல்லாம் சில குணங்களுள. அக் குணங்களிற் சில எல்லாப் பொருள்களுக்கும் பொதுவாகவும் ஏனைய சில பொருள்களுக்கு மாத்திரமே சிறப்பாகவும் அமைந்துள. அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து விளக்குவாம்.

1. விரிவு[1] :—ஒவ்வொரு பொருளுக்கும் விரிவு அதாவது நீளம், அகலம், பருமன் இல்லையாயின் எப்பொருளையுங் காண்பது அரிதாய்விடும். இவற்றி னேற்றத் தாழ்ச்சியினால் தான் பல்வித உருவங்களு முளவாகின்றன.

2. ஊடுருவப்படாமை[2] (நிராக்கிரமணம்):— அதாவது இரண்டு பொருள்கள் ஒரே சமயத்தில் ஒரே யிடத்தில் பொருந்தா வென்பதாம். தொட்டித் தண்ணீர்க்குட் கையைப் புகுத்தலாமெனின் இங்கே நீர்த்துளிகளைத் தம்மிடம் விட்டுப் பெயர்த்த பின்னரே கை யவ்விடத்து அமர்ந்து கிடந்ததல்லாமல் ஒரே காலத்தி லொரே இடத்தில் இரண்டு பொருள்க ளிருந்தமைக்கு உதாரண மாகமாட்டாதென்க. மீண்டும், நன்றாய்ப் பொடித்த நாழி யுப்பினையும் நாழி யப்பினையும் ஒன்றாய்ச் சேர்க்க இருநாழி யாகாது குறைவுபடுவ தேனெனிற் கூறுவாம். பொருள்களி னணுக்களிற் கிடையிடையே வெற்றிடங்கள் சில சிலவற்றிற் சிறியனவாகவும் சிலவற்றிற் பெரியனவாகவும் அமைந்து கிடக்கின்றன. பருத்தி, குறுங்கிடை, மரம், நெட்டி முதலியனவற்றிற் பெரியனவாயுள்ளன. இதுபற்றியே இவைகள் அமுக்கல் அல்லது அழுத்தல் வலியால்[3] சுருங்கப் பெறுதலும் மற்றைப் பொருள்களால் அவ்வெற்றிடங்கள் நிரப்பப் படுதலுங் கூடும். ஆதலால் நாழி யுப்பும் நாழி யப்பு மிருநாழியாகாமற் குறைவு பட்டமைக்குக் காரணம் உப்பினிற் சிறிது அப்புவினிடையுள்ள வெற்றிடங்களை நிரப்பிக்கொள்ளலே யென்க.

3. பாகுபாடு[4] :—பொருள்களின் பாகுபாட்டினை யாரே

1. Extension 2. Impenetrability 3. Pressure 4. Divisibility

யுரைக்கற்பாலார்? ஒரு மரக்கட்டையிலிருந்து துண்டொன்று வெட்டலாம்; அத்துண்டினின்றும் வாளுதவியால் தூள் பெறலாம்; இத்தன்மையான தூள் ஒவ்வொன்றும் பூததிருஷ்டிக் கண்ணாடி[1] மூலமாய்ப் பார்த்தால் மரக்கட்டையின் வடிவமாய் நிற்பதையும் அஃது இன்னும் மிகச்சிறிய தூட் கூட்டங்களாலமைந்து கிடப்பதையுங் காணலாம். பொருள்களின் பாகுபாட்டினை யுரைப்பது மகா கஷ்டம். பத்து லக்ஷம் ஜீவன்களை ஒன்றன்பக்கத்தொன்றாகக் கிடத்தினாலும் ஒரு மணற் பருமனுக்கு மேலாகாதவளவு நுண்ணிய ஜீவன்களின் உண்மைகளை பூததிருஷ்டிக் கண்ணாடி வெளியிடுகின்றது. இச்சிறு ஜீவன்களுக்கும் அவயவங்களும் இயக்கமுமுள்ளன! இவைகளுக்கு நாடிகளு முளவாயின் அந்நாடிகளின் வழியாக இரத்தமும் பாய்ந்துகொண்டிருக்குமாயின் அவ்விரத்தத் துளிகளின் நுண்மையை யாவராலுரைக்க முடியும்?

அப்படியாயிற் பொருள்களின் பாகுபாட்டிற்கு எல்லையே இல்லையோவெனின், அப்படிக் கொள்வதும் அசாத்தியமாயிருக்கின்றது. பொருட்கலவை,[2] ஸ்படிகாகரணம்[3] முதலிய காரணங்களா லித்தன்மையான பாகுபாட்டிற்கு மோர் எல்லையுண்டென்று ஊகிக்கப்படுகின்றது. கடைசியாகப் பகுக்கப்படாது நிற்கக்கூடியவற்றிற்கே அணுக்கள்[4] எனப் பெயரிடப்பட்டிருக்கின்றது.

4. அழிவின்மை[5]:— பொருள்க ளெப்பொழுது மழிதலில்லையென்று சொன்னால் விளக்கெரியும்போது எண்ணெய் காணாமற் போதலையும், ஏரிகளிற் சலங் குறைவுபடுதலையும் கண்ணுறும்போது அவை சிறிது ஆச்சரியமாகத் தோன்றக்கூடும். ஆயினு மிங்கே யெடுத்துக்காட்டிய உதாரணங்களும் இவை போன்றவைகளும் உருவம் அல்லது தன்மையின் மாறுதல்களுக்குக் காட்டுக்களாமே யன்றிப் பொருளழிவிற்குக் காட்டுக்களாகா. தன்மை மாறினும் பொருளினுக் கழிவின்று. ஒரு கடாகத்தினிற் கொஞ்ச சலத்தினை உஷ்ண சக்தியால் ஆவியாக

1. Microscope 2. Chemical Combination 3. Crystallisation
4. Atoms. 5 Indestructibility

மாற்றினு மவ்வாவி வெளிப்புகாவண்ணங் கடாகத்தின்வாய் மூடிவைத் திருந்திருக்கப்பெறின் அக் கடாகத்தின் இடை சிறிதுங் குறையாதிருப்பதைக் காணலாம். மீண்டுமக் கடாகத்தினைக் குளிர்நீராற் குளிர்ச்சி செய்த பின்னர் முதலிருந்த ஜலமவ்வளவு மாங்கிருக்கக் காணலாம். இதுபோலவே இவ்வண்டத்திலும் பலவித நிலைமாறுதல்க ளுளவேயன்றி யொரு பொருளும் புதிதாகச் சிருட்டிக்கப்படுவதாவது அழிக்கப்படுவதாவது இல்லை. அனாதி தொடங்கிப் பலவித நிலைகளில் அமைந்து கிடப்பதே யன்றிப் புதிதாக வுளதாதலு மிலதாதலு மெய்ப்பொருட்குமில்லை.

5. நிலைப்பிடிப்பு[1] (அசேஷ்டனம்):—அஃதாவது உயிரில் பொருள்கள் புறக்காரணத்தா லன்றித் தாமொருபோது அடைந்த நிலைமைகளில் மாறுபடாமல் தம் நிலைமையினையே பற்றி நிற்றல். இயக்கமிலா நிலைமையினின்றுந் தாமே இயக்கங்கொள மாட்டா. இயக்க நிலையினின்றுந் தாமே இயங்கா நிலை கொள்ளா. நிலைப்பேதத்தினுக்குப் புறக்காரண மிருத்தலாவசியகம். பூமியின்மீது ஓடவிட்ட பந்து சீக்கிரத்தில் நின்றுவிடுகின்றது; அப் பந்தினையே நன்றாயிழைத்த மரப்பலகையின்மீதோடவிட்டால் அதிக நேர மோடுகின்றது. என்னை? மரப்பலகையினாலுண்டான உறழ்ச்சி வலியினும்[2] பூமியாலுண்டான வுறழ்ச்சிவலி யதிகமானதனாலென்க. அஃது இயக்க நிலையிலேயே யிராமைக்கு வாயுவி னுறழ்ச்சிவலி மற்றொரு காரணமாகும். இவ் விருவகை யுறழ்ச்சியே பந்தினோட்டத்தை யெதிராக நின்று தடுத்தனவென்க. சுழலும் பம்பரம் காற்றொழி கருவியால்[3] வாயுநீக்கப்பட்ட விடத்தில் நெடுநேரம் சுழன்று கொண்டிருக்கும், வாயுவினுறழ்ச்சி இங்கே யில்லையாதலால். கிண்டி யென்னுமூரில் நடக்கும் பந்தயத்தின்கண்[4] குதிரைகள் கொடிக்கம்பத்தைத் தாண்டி வெகு தூரஞ் செல்வதற்குக் காரணம் அவற்றின் தேகங்களுக்கு இயக்க நிலையின்கணுள்ள பிடிப்பினா லென்க. அன்றியும் ஒரு வண்டி யோடிக்கொண்

1. Inertia 2. Friction 3. Air-pump 4. The Guindy Races

டிருக்கையில் ஒருவன் குதிப்பானாயின் அவன் குப்புற வீழ்தல் வேண்டும். என்னை? வண்டியின் வேகத்தினை மேற்கொண்டு அவன் தேகமுமியக்கங் கொண்டிருக்கும் போது அவன் திடீரெனக் குதித்தலால் அவன் காலினியக்க மாத்திரம் பூமியிற் றேய்தலாகிய புறக்காரணத்தால் நிறுத்தப்படலும், தேகத்தின் மேற்பாகம் அத்தன்மையான புறக்காரண மொழியவே வண்டியின் வேகங்கொண்டு அசைந்தே நிற்பதனால் விழவேண்டியதாயிற்று. புறக்காரண மில்லாதபோது அசையும்பொருள்கள் அசைந்துகொண்டே யிருப்ப, வாயுவினுறழ்ச்சி முதலிய வுறழ்ச்சிகள் சிறிது மில்லாமல் ஆகாயத்தினூடே சஞ்சரிக்குங் கிரகக் கூட்டங்கள் அனாதிதொடங்கி யசைந்தே நிற்கின்றன.

6. சுருங்கல்[1] :—பருத்தல்[2] :—யாதேனுமொரு பொருள் அழுத்தல் வலியாலாவது குளிர்ச்சியாலாவது முன் கொண்டவிடத்தினுஞ் சிறிதிடம் குறுகிக் குறையுமாயின், அது சுருங்கிற்றெனவும்; அழுத்தல் வலி நீக்கத்தினாலாதல் உஷ்ணத்தினாலாதல் அதிகமா யிடங் கொள்ளுமாயின் அது பருத்த தெனவும் படும். மிகவு மதிகமாகச் சுருங்கக் கூடியன வாயுப்பொருள்களே; மிகக் குறைவாகச் சுருங்கக் கூடியன தண்ணீர் முதலிய திரவப் பொருள்களாம்.[3] சதுரங்கலத்திற்குப் பதினையாயிரம் ராத்தல் வலியால் இருபது பங்கி லடங்கக்கூடிய ஜலம் பத்தொன்பது பங்கி லடங்கும். வாயுக்கள் அதிகக் குளிர்ச்சியினாலும் அழுத்தல் வலியினாலும் மிகச் சுருங்குவனவே யல்லாமல் திராவக ரூபமாகவும் மாறிவிடும். பொருள்கள் சாதாரணமாய்ச் சூட்டின் காரணத்தாற் பருக்கின்றன. இருப்புக் கம்பியைக் காய்ச்சினால் அது பருக்கக் காணலாம். திடப்பொருளினும்[4] திரவப் பொருள்க ளதிகமாகப் பருக்கக் கூடியன. வாயுக்கள் பருத்தற்கு அளவே கிடையாது. கொட்டைப் பாக்கி னளவினதாக எவ்வித வாயு[5] வையேனும் ஓரறையில் விட்டால் அஃது அவ்வறை முழுவதும் பரவி விடும். அவ்வாயு வில்லாத பாகம் அவ்வறையெங்குங் கிடையாது.

---

1 Contraction　2 Expansion　3 Liquids　4 Solids　5 Gas

7. மீட்சிவலி[1] (ஸ்திதி ஸ்தாபகம்):— சில பொருள்கள் அழுத்தல் வலி அல்லது குளிர்ச்சி காரணமாய்ச் சுருங்கின வெனினும் அவ்வழுத்தல் வலி அல்லது குளிர்ச்சி நீங்கின வுடனே அவை மீண்டும் தம்முடைய முன் பெற்றியை யடை கின்றன. அத்தன்மையான பொருள்களே இம் மீட்சி வலியை யுடையனவாகும். திரவப்பொருள்கட்கும் வாயுப்பொருள்கட்கும் இக்குணம் அதிகமாக உண்டு. திடப்பொருள்களில் தந்தம்-எஃகு-முதலியவற்றிற்கு இக்குண மதிகம். ஒரெஃகு கம்பியினை இழுத்து விட்டுவிட்டாற் சற்று நேரத்தில் ஏறக்குறைய முன்பிருந்த பிரமாணத்திற்கு வந்துவிடும். [இம் மீட்சி வலியை நிலைபெறுத்துகை யென்பர் ஆசிரியர் சிவஞான யோகிகள்.]

8. தொளைத்தன்மை[2] :— நெருக்கம்[3] :— முன்னர் நிராக்கிரமணத்தைப்பற்றி விரித்தபோது பொருள்களின் அணுக்களுக்கு இடையிடையே வெற்றிடங்களுளவென்று கூறினும். இவ் வெற்றிடங்கள் அழுத்தல் வலியாலாதல் சீதோஷணத்தாலாதல் குறைவுபடலும் அதிகப்படலுமே பொருள்கள் சுருங்கற்கும் பருத்தற்கு மேதுவென்றறிக. இவ் வெற்றிடங்கள் குறையக்குறைய அணுக்களின் நெருக்க மதிகமாகின்றன. திடப்பொருள்கள் கனமாயிருத்தற்கு அவற்றி னணுக்கள் நெருக்கமாக அவற்றின் இடையுள்ள வெற்றிடங்கள் சிறுபான்மை யென்பது ஒரு காரணமாகும். கனம் அதிகமாகுந்தோறும் இடையும் அதிகமாகும். குளத்தின் நடுவில் வர்ணத் திராவகம் நிறைந்ததொரு தொட்டியினை மிதக்கவிடலும் சிறிது நேரத்தில் அத்தொட்டியி லந்தத் திராவகமில்லாமற் குளிர்நீ ரிருக்கக் காணலாம். என்னை? வர்ணத் திராவக மனைத்தும் தொட்டித் துவாரங்களினூடே வெளிப்புகக் குளிர் நீர் உள்ளே நுழைவதனாலென்க.

9. நிலக்கவர்ச்சி[4] (பௌமியாகர்ஷணம்):— கவர்ச்சித் தோற்றங்களில் அநேக விதங்களுள. அவற்றை முறையே

1 Elasticity 2 Porosity 3 Density 4 Gravity or Earth's attraction

விளக்கக் கருதி முதலில் நிலக்கவர்ச்சியை யெடுத்துக்கொண் டனம். மரத்தின் பழம் ஏன் கீழே விழுந்தது? இதற்குக் காரணம் மேற்புல விஞ்ஞானிகளு ளொருவர்[1] கண்டுபிடித்தார். ஒவ்வொரு பொருளும் மற்ற ஒவ்வொரு பொருளையும் தன்தன் பிரமாணத்திற்கேற்பவும் இடையேகிடந்த தூரத்திற் கேற்பவும் இழுக்கின்றதென்னும் ஓராச்சரியகரமான பிரகிருதி நியாயத்தினை வெளியிட்டார். இவ்வியற்கை யொழுங்கிற் குட்பட்டே பூமியானது மரத்தின் பழத்தினையும், சந்திரனையும், ஞாயிறு பூமி முதலிய கிரகங்கள் யாவற்றினையு மிழுக்கின்றன வென்பதைப் புலப்படுத்தினர். இவற்றி லொன்றேமற்றொன்றை இழுப்ப தென்பதின்றி ஒன்றனை யொன்று பரஸ்பரம் இழுக்கின்றது என்பது வலியுறுத்துணரற் பாலது.

10. காந்தக்கவர்ச்சி[2] :—காந்தமென்று சொல்லப்பட்ட ஒருவித இரும்பினை நூலினுல் தொங்கவிட்டால் அதனொரு முனை வடதிசையையே நோக்கி நிற்கும். அதனருகே வேறொ ரிருப்புத் துண்டினைக் கொணரின் இரண்டும் ஒன்றனை யொன்று இழுக்கக் காணலாம். ஓரிருப்புத் துண்டு அல்லது எஃகினுற் செய்யப்பட்ட ஊசி ஒன்றைக் காந்தத்தின்மே லொரு விதமாகத் தேய்த்தால் அதுவுமொரு காந்தமாம். இத்தகைய காந்தந்தான் கரைகாணுக் கடலில் மானுமிக்கு வழிகாட்டிக்கொண்டு வருகிறது.

11. மின்வலிக்கவர்ச்சி[3] :—மின்வலி கண்ணுக்குப் புலப்படாதெனினும் அதிகமாக ஆகாயத்தின்கண் உண்டாகின்றது. இவ்வலி எல்லாப் பொருள்களிலும் சாதாரணமாய் ஏற்றத்தாழ்ச்சியின்றிச் சமமா யிருப்பவும் சில காரணங்களாற் சில வமயத்துச் சில பொருள்களில் அதிகமாகவும் சிலவற்றிற் குறைவாகவும் நிற்கும். மிக்க மின்வலியுள்ள பொருள் குறைந்த மின்வலியுள்ள பொருளருகில் நின்ருல் ஒன்றினை யொன்று இழுக்கும். இதற்குத்தான் மின்வலிக்கவர்ச்சியென்று பெயர். வேனிற் காலத்திற் கண்ணுடியாற் செய்த கொம்பொன்றினைத் துணியால் நன்ருய்த் தேய்த்துக் காகிதத் துண்டுகள் முதலிய இலே

1 Sir Isaac Newton 2 Magnetic attraction 3 Electric attraction

சான பொருள்களருகிற் கொண்டுவர அவைக ளிழுக்கப்படுவதைக் காணலாம். இவ்வலி யதிகமாகி மேகங்களொன்றோடொன்று உராயும் போதுதான் மின்னலும் இடியும் உண்டாகின்றன. (தொடரும்)

(ஞானபோதினி)

---

## திருத்தம்

(திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள்.)

செந்தமிழ்ச் செல்வி 9-சிலம்பு 1-பரல் 12-வது பக்கத்தில் "மேலும் அப்பர் அவதார ஸ்தலமாகிய திருவாமூரில் அவரைப் பற்றி யாதொரு கல்வெட்டும் கிடைக்கவில்லை" என்று எழுதியிருந்தேன். எனது நண்பர் திருநாமநல்லூரைச் சார்ந்த கிழக்கு மருதூர் திரு. தி. கு. நாராயணசாமி நாயுடு அவர்கள் அன்புடன் தெரிவித்தபடி அவ்வுரை பிசகு என்று தெரிந்தது. அப்பர் அவதரித்த தலமாகிய திருவாமூரில் சில கல்வெட்டுகள் இருக்கின்றன. அவைகளில் ஒரு கல்வெட்டில் " திருநாவுக்கரைய தேவர்க்கு நாங்கள் விற்றுக் கொடுத்த நிலமாவது" என்றும், "ஆளுடைய திருநாவுக்கரைய தேவர்க்கு ஸிலாலேகை செய்து கொடுத்தோம் திருவாமூர் ஊரோம்" என்றும் காண்கிறோம். இக் கல்வெட்டு குலோத்துங்கச் சோழன் 21-ம் ஆண்டில் செதுக்கப் பெற்றது. அதில் மெய்க்கீர்த்தியானது "புகழ் மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர் மகள் புணர" என்று இருத்தலால் அவ்வரசன் 1073 முதல் 1118 வரை ஆண்ட I-வது குலோத்துங்கன் ஆகவேண்டும். ஆகவே இக் கல்வெட்டு 1094 ஆண்டில் ஏற்பட்டது. இச் சாசனத்தை அரசாங்கத்தார் எடுத்து எழுதாததால் மேற்சொன்ன பிசகு ஏற்பட்டது. தற்போது இக் கல்வெட்டை நண்பர் நாராயணசாமி நாயுடு அவர்கள் படித்து எழுதி வெளியிட்டதால் அன்னார்க்குத் தமிழுலகம் மிகவும் கடமைப்பட் டுள்ளது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

---



சிவபுரம் ஜமீன்தார், பா. வே. மாணிக்க நாயகர்,
அவர்கள் பி. இ., ரிட்டையர்ட்
சுப்ரிண்டெண்டிங் இஞ்சினியர், சென்னை.